'நீ,' 'காண்டி' என்றது, சடாயுவை நோக்கி. வாள் அரக்கன் - வாட்படையையுடைய அரக்கனுமாம். பி-ம்:—[1]நீதிக். [2]உறுதி. (கoகரு)

உoரு. தாரகை யுதிரு மாறுந் தனிக்கதிர் பிதிரு மாறும்
பேரகல் வான [1]மெங்கும் பிறங்கெரி பிறக்கு மாறு
நீரொடு நிலனுங் [2]காலு நின்றவுங் கிடந்த யாவும்
[3]வேரொடு மழியு மாறும் விண்ணவர் விளியு மாறும்.

(இ - ள்.) (என்னால்), தாரகை உதிரும் ஆறும் - நக்ஷத்திரங்கள் உதிரும் வகையையும், தனி கதிர் பிதிரும் ஆறும் - ஒப்பற்றகிரணங்களையுடைய சூரியன் பொடிப்பொடியாய்ச் சிதறும்வகையையும், பேர் அகல் வானம் எங்கும் - பெரிய அகன்ற வானம்முழுவதிலும், பிறங்கு எரி பிறக்கும் ஆறும் - விளங்குகிற தீப்பற்றியெழும்வகையையும், நீரொடு நிலனும் காலும் - நீரும் நிலமும் காற்றும், நின்றவும் - ஒழிந்த நெருப்பும் வானமும், (ஆகிய பஞ்சபூதங்களும்), கிடந்த யாவும் - (உலகத்திற்) பொருந்திய சராசரவர்க்கமனைத்தும், வேரொடும் அழியும் ஆறும் - அடியோடு அழியும்வகையையும், விண்ணவர் விளியும் ஆறும் - தேவர்கள் அழியும்வகையையும்; (எ - று.)

பேர் அகல் - ஒருபொருட்பன்மொழி. நின்ற, கிடந்த - பெயர்கள். பி - ம்:—[1]எல்லாம். [2]மற்று. [3]வேரொடுமடியுமாறும். (கoகசு)

உoசா. இக்கண மொன்றி னின்ற வேழினோ டேழு [1]சான்ற
மிக்கன போன்று தோன்று முலகங்கள் [2]விளியு மாறுந்
திக்குடை யண்ட [3]கோளப் புறத்தவுந் தீந்து நீரின்
மொக்குளி னுடையு மாறுங் காணென [4]முனியும் வேலை.

(இ - ள்.) நின்ற-நிலைபெற்றுநின்றனவான, மிக்கன போன்று தோன்றும் - மிகவும்பெரியவைபோலக் காணப்படுகிற, எழினோடு எழு சான்ற - ஏழோடுகூடிய எழு [பதினான்கு] என்னுந் தொகையமைந்த, உலகங்கள்-உலகங்களெல்லாம், இ கணம் ஒன்றில் - இந்தஒருகணத்திலே, விளியும் ஆறும் - (என்னால்) அழியும் வகையையும், திக்கு உடை - எட்டுத்திக்குக்களையெல்லையாகவுடைய, அண்ட கோளம் - இந்த அண்டகோளத்தின், புறத்தவும் - வெளியிலுள்ளவையும் [பகிரண்டங்களிலுள்ள பொருள்களும் என்றபடி], (இ கணம் ஒன்றில்)-இந்தஒருகணத்திலே, தீந்து - (எனதுகோபத்தாற்) கரிந்து, நீரின் மொக்குளின்-நீரிலெழுகிற குமிழிபோல, உடையும் ஆறும்-எளிதில்அழியும் வகையையும், காண்-(நீ) பார்த்திடுவாய், என-என்று (சடாயுவை நோக்கிச்) சொல்லி, (இராமன்), முனியும் வேலை - கோபங்கொண்ட சமயத்திலே,—(எ - று.)—"சுடர்க்கடவுள் மறையவுற்றான்" என வருங் கவியோடு தொடர்ந்து முடியும்.

'இக்கணமொன்றில்' என்பது, 'விளியும்' என்பதனோடன்றி 'உடையும்' என்பதனோடும் எடுத்துக்கூட்டப்பட்டது. இக்கணமொன்றிற் காண் என இயைப்பினும் அமையும். நின்ற, சான்ற, தோன்றும் என்றமூன்றும்-உலகங்

களுக்கு அடைமொழியாம். 'மிக்கனபோன்றுதோன்று மூலகங்கள்' என்றது, அவை எனது ஆற்றலுக்குமுன் ஒருபொருளல்லவென்ற கருத்தைத்தொனிப்பிக்கும். பி-ம்:—[1]மேல்கீழ். [2]வீயும். [3]கோளந்திறக்கவுந்தெரித்த. [4]முனிதலோடும். (௧௦௭)

௨௦௭.—அப்பொழுது சூரியன் மறைய யாவும் அஞ்சுதல்.

வெஞ்சுடர்க் கடவுண் மீண்டு மேருவின் மறைய லுற்றா
னெஞ்சலி றிசையி னின்ற யானையு மிரியல் போய
[1]துஞ்சின வுலகை மெல்லா [2]மென்பதென் றுணிந்த [3]நெஞ்சி
னஞ்சின னிளைய கோவு மயலுளோர்க் கவதி யுண்டோ.

(இ - ள்.) வெம் சுடர் கடவுள்-வெவ்விய கிரணங்களையுடைய சூரியன், மீண்டு-(அக்கோபத்திற்கு இலக்காகாது) தப்பி உய்பவனாகி, மேருவில் மறையல் உற்றான் - மகாமேருமலையிலே மறையத்தொடங்குபவனானான்; எஞ்சல் இல் - குறைவற்ற, திசையில்-(எட்டுத்)திக்குகளிலும், நின்ற—, யானையும்-(அஷ்டதிக்) கஜங்களும், இரியல் போய - அஞ்சியோடின; உலகம் எல்லாம் துஞ்சின என்பது என் - உலகத்திலுள்ள எல்லாப்பிராணிகளும் மிகவருத்தமுற்றன வென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுவதென்ன! துணிந்த நெஞ்சின் - மிகவுந்தைரியங்கொண்ட மனத்தையுடைய, இளைய கோவும்-இலக்குமணனும், அஞ்சினன் - அஞ்சிநின்றான், (என்றால்), அயல் உளோர்க்கு அவதி உண்டோ-மற்றுமுள்ளோர்கொண்ட அச்சத்திற்கு ஓரெல்லையுண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

அப்பொழுது இராமன்கொண்ட கோபாவேசத்தைக் கண்டு எல்லாப்பிராணிகளும் மிகஅஞ்சி நிலைகுலைந்தன வென்ற கருத்தை, மகாதைரியசாலியான இலக்குமணனும் அஞ்சினான் என்பதுகொண்டு தண்டாபூபிகாநியாயத்தாற் சாதித்தார்; தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. பி - ம்:—[1]துஞ்சினது. [2]என்பது. [3]நெஞ்சன். (௧௦௮)

௨௦௮.—இதுமுதல் ஐந்துகவிகள்-சடாயு இராமனுக்குக் கூறுந் தணிவுரை.

இவ்வழி நிகழும் வேலை [1]யெருவைகட் கிறைவன் யாதுஞ்
செவ்வியோய் முனியல் வாழி தேவரு முனிவர் தாமும்
வெவ்வலி வீர நின்னால் வேறுமென் றேமுற் றுய்வா
ரெவ்வலி கொண்டு வெல்வா ரிராவணன் செயலை [2]யென்றான்.

(இ - ள்.) இ வழி நிகழும் வேலை-இவ்வாறுநடக்கும்பொழுது, எருவைகட்கு இறைவன் - கழுகுகளுக்குஅரசனான சடாயு, (இராமனைநோக்கி), 'செவ்வியோய் - நன்மைக்குணமுடையவனே! வாழி - வாழ்வாயாக; யாதும் முனியல் - சிறிதும்கோபங்கொள்ளாதே; வெம் வலி வீர - (பகைவர்க்குக்) கொடிய வலிமையையுடைய வீரனே! தேவரும் முனிவர்தாமும்-தேவர்களும் முனிவர்களும், நின்னால் வேறும் என்று ஏமுற்று உய்வார்-உன்னைக்கொண்டு (தம்பகையாகிய அரக்கர்களை) வெல்வோமென்று கருதி மகிழ்வுற்று உயிர்

வாழ்கின்றார்;(அப்படிப்பட்டவர்கள்), எ வலி கொண்டு இராவணன் செயலை வெல்வார் - வேறு எவ்வகை வலிமையைக்கொண்டு இராவணனது கொடுஞ் செயலை வென்றிடுவார்?' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

இராவணன்முதலிய இராக்கதர்களை வெல்லும் வல்லமை யில்லாராய் மகாவீரனான உன்னைக்கொண்டு வெல்லக்கருதி அதனை எதிர்பார்த்து மகிழ்வு கொண்டு உயிர்வாழ்ந்திருக்கிற தேவர்கள் முதலியோர்மேல், இராவணனுக்கு எதிர்செய்யவில்லையென்று நீ கோபித்தால் அவர்கள் செய்யுமாறு என்னே! அக்கோபங்கொள்ளாதொழி யென்றுகூறி இராமன்கோபத்தைச் சடாயு ஆற்றுபவனானான். 'செவ்வியோய்' என்றது, இராம என்ற திருநாமத்தின் பொருளைக்கொண்ட விளியாம். ஏமுற்று - ஏமமுற்று; விகாரம். **பி-ம்:—** [1]எருவையர்க்கரசன். [2]என்னை. (௧௦௧௯)

௨௦௯. நாட்செய்த கமலத் தண்ணல் [1]னல்கின நவையி லாற்ற
றோட்செய்த வீர மென்னிற் கண்டனை சொல்லு முண்டோ
தாட்செய்த [2]கமலத் தானே முதலினர் தலைபத் துள்ளாற்
காட்செய்கின் றார்க ளன்றி யறஞ்செய்கின் றார்கள் [3]யாரே.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நாள் செய்த கமலத்து - அன்றுமலர்ந்த செந்தாமரைமலரில் தோன்றிய, அண்ணல் - தலைவனான பிரமதேவன், நல்கிய - (வரமாகக்) கொடுத்த, நவை இல் ஆற்றல் - அழிவில்லாத வலிமையையுடைய, தோள் - புயங்களினால், செய்த - (இராவணன்) செய்த, வீரம் - வீரச்செயலை, என்னில் கண்டனை - (சிறகறுபட்டுக்கிடக்கிற) என்னிடத்திலே பிரதியக்ஷமாகப் பார்த்தாய்; சொல்லும் உண்டோ-(அதைப்பற்றி) வேறுசொல்லவேண்டுவதும் உளதோ? [இல்லையென்றபடி]: தாள் செய்த கமலத்தானே முதலினர் - நாளத்தோடு கூடிய தாமரைமலரில் தோன்றிய பிரமன் முதலிய தேவர்கள் எல்லோரும், தலை பத்து உள்ளாற்கு ஆள் செய்கின்றார்கள் அன்றி - பத்துத் தலைகளையுடைய இராவணனுக்கு அடிமைத்தொழில் செய்கின்றனரே யல்லாமல், அறம் செய்கின்றார்கள் யாரே - (அவர்களில் தத்தமக்குஉரிய) தருமங்களை விடாது செய்பவர் எவர்தாம்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

ஆதலின், அவர்கள்மீது நீ சினங்கொள்ளக் காரணமில்லை யென்பதாம். முதலடியை 'என்னில்' என்பதற்கு அடைமொழியாக்கி, பிரமன் தந்தருளிய அழிவற்ற வலிமையையுடைய என்னிடத்திலே (அவ்விராவணன்) தோள் வலிமையாற்செய்த வீரச்செயலைக் கட்புலனாகக் கண்டா யென்று உரைப்பாரும் உளர். **பி - ம்:—**[1]நல்கினன். [2]நளினத்தோனே முதலினர் தலைபத்தோனுக்கு. (௧௦௨௦)

௨௧௦. தெண்டிரை யுலகந் [1]தன்னிற் செறுநர்மாட் டேவல் செய்து
பெண்டிரின் வாழ்வ ரன்றே பிதாவென்றோ தேவர் பெற்றி
பண்டுல களந்தோ [2]னல்கப் பாற்கட லமுத [3]மந்நா
ளுண்டில [4]ராயி னிந்நா ளன்னவர்க் குய்த லுண்டோ.

(இ - ள்.) தெள் திரை உலகந்தன்னில் - தெளிவான அலைகளையுடைய (கடல்சூழ்ந்த) உலகத்திலே, பெண்டிரின்-மகளிர் போல [மகளிர் ஆடவர்க்கு அடிமைபூண்டுவாழ்தல்போல],செறுநர்மாட்டு ஏவல் செய்து வாழ்வர் அன்றே-(இந்திரன்முதலியோர் அனைவரும் தம்)பகைவர்களான இராவணன்முதலிய அரக்கர்களிடத்திலே பணிவிடைசெய்து வாழ்கின்றார்களல்லவா; தேவர் பெற்றி இது அன்றோ-தேவர்களின் தன்மை இதுவன்றோ?(அத்தேவர்கள்), பண்டு உலகு அளந்தோன் பால் கடல் அமுதம் நல்க அ நாள் உண்டிலர் ஆயின்-முன்பு உலகங்களை அளந்துகொண்டவனான திருமால் திருப்பாற்கடலினின்று தோன்றிய அமுதத்தைக் கொடுத்தருள அந்நாளில் உண்ணாதிருந்தனராயின், இ நாள் அன்னவர்க்கு உய்தல் உண்டோ-இக்காலத்தில் அவர்கட்கு உயிர் பிழைத்திருத்தலும் உளதாமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)

முன்பு அமிருதமுண்டதுபற்றித் தேவர்கள் அரக்கரால் இறவாது உயிர் கொண்டு வாழ்கின்றனரே யன்றி வேறில்லை யாதலின், அவர்கள் நீ கோபித்தற்கு உரியரல்லரென்றபடி. பண்டு - திரிவிக்கிரமாவதாரத்தில். அந்நாள் - பாற்கடல் கடைந்தபொழுது. 'அன்றே', 'அன்றோ' இரண்டும் - தேற்றம். 'இதுவன்றோ தேவர்பெற்றி' என்றது, இரங்கிக்கூறியவாறு. பி-ம்:—[1]தன்னுள். [2]தந்த. [3]வாய்கொண்டு. [4]ஆகில். (க0உக)

உகக. வம்பிழை கொங்கை வஞ்சி வனத்திடைத் தமியள் வைகக்
கொம்பிழை மானின் பின்போய்க் குலப்பழி [1]கூட்டிக் கொண்டீ
ரம்பிழை வரிவிற் செங்கை யையன்மீ ராயுங் காலை
யும்பிழை யென்ப தல்லா லுலகஞ்செய் பிழையு முண்டோ.

(இ - ள்.) அம்பு இழை-அம்புதொடுக்கிற, வரி வில்-கட்டமைந்த வில்லையேந்திய, செம் கை - சிவந்த கையையுடைய, ஐயன்மீர் - அருமைமக்களே! வம்பு இழை - கச்சையணிந்த, கொங்கை தனங்களையுடைய, வஞ்சி-வஞ்சிக்கொடிபோல் மெல்லியளான சீதை, வனத்திடை - காட்டிலே, தமியள் வைக - தனித்தவளாய் நிற்க, கொம்பு இழை மானின் பின் போய்-கொம்புகள் பொருந்திய மானின்பின்னே சென்று, குலம் பழி கூட்டிக்கொண்டீர்; (சீதையையிழந்து உங்கள்)குலத்துக்குப் பழியை உண்டாக்கிக்கொண்டீர்கள்; ஆயும் காலை - ஆராய்ந்துபார்க்குமிடத்து, உம் பிழை என்பது அல்லால் - (இது) உங்கள்குற்றமாகுமே யல்லாமல், உலகம் செய் பிழையும் உண்டோ - (இவ்விஷயத்தில்) உலகத்தார் செய்த குற்றமும் உள்ளதோ?[இல்லை யென்றபடி]; (எ - று.)

வஞ்சி - ஆகுபெயர். 'கொம்பிழைமான்' என்பதற்கு-கொம்புகள் இரத்தினம்பதிக்கப்பெற்ற மானென்று உரைப்பாரும் உளர். ஐயன்மீர்-ஐயன்மார் என்பதன் ஈற்றயல்திரிந்த விளி. மக்களை 'ஐயன்மீர்' என்று விளித்தது, அன்புபற்றிய மரபுவழுவமைதி. பி-ம்:—[1]பூட்டிக்கொண்டீர். (க0உஉ)

உகஉ. ஆதலான் முனிவா யல்லை யருந்ததி யனைய கற்பிற்
காதலா டுயர நீக்கித் தேவர்தங் கருத்து முற்றி
வேதநூன் முறையின் யாவும் [1]விதியுளி நிறுவி வேறுந்
தீதுள துடைத்தி யென்றான் [2]சேவடிக் கமலஞ் சேர்வான்..

(இ - ள்.) ஆதலால்—, முனிவாய் அல்லை - (நீ) கோபங்கொள்ளாதொழி; அருந்ததி அனைய கற்பின் காதலாள் துயரம் நீக்கி - வசிஷ்டர்பத்தினியான அருந்ததீதேவியை யொத்த தவறாக்கற்புநிலைமையையுடைய உன்மனைவியாளது துன்பத்தை நீக்கி, தேவர்தம் கருத்து முற்றி-(அரக்கர்களை வேரோடு தொலைத்தலாகிய) தேவர்களுடைய எண்ணத்தை நிறைவேற்றி, யாவும் - செய்யவேண்டுஞ் செயல்களை யெல்லாம், வேதம் நூல் முறையின் விதியுளி நிறுவி - வேதசாஸ்திரங்களில் ஒழுங்காகக்கூறப்பட்ட விதிப்படி செய்துநிறுத்தி, வேறும் தீது உள துடைத்தி - மற்றுமுள்ள தீமைகளையும் தீர்த்தருள்வாய், என்றான் - என்றுகூறினான், சே அடி கமலம் சேர்வான் - (அவ்வெம்பெருமானது) சிவந்த திருவடித்தாமரைமலர்களைச் சேர்பவனான சடாயு; (எ - று.)

'யாவும்' என்றது உலகாளுதல் வேள்விசெய்தல் முதலியவற்றைக் குறிக்கும். வேறுந்தீதுள துடைத்தல் - மற்றும் உலகத்தில்நிகழும் அக்கிரமச் செயல்களைக் கண்டித்தல்; அச்செயல்கள், சூத்திரகன் தவஞ்செய்தல் போல்வன. சேவடிக்கமலம் சேர்வான் - பரமபதமடையவிருப்பவனென்றபடி. பகைவென்றபின் பிராட்டியை அங்கீகரிக்கத் தடையாதுமில்லை யென்பது விளங்க, 'அருந்ததியனைய கற்பிற் காதலாள்' என்றார். பி-ம்:—[1]விதியுள. [2]தேவர்தமுலகம். (கஎஉ)

உகங.—இராமன் உலகத்தார்மேற் கொண்ட கோபந் தணிதல்.

புயனிற வண்ண னண்டப் புண்ணியன் புகன்ற சொல்லைத்
தயரதன் பணியி தென்னச் சிந்தையிற் [1]றழுவி நின்றா
னயலினி முனிவ தென்னை [2]யரக்கர்தம் வருக்கந் தீர்க்குஞ்
செயலினிச் செயலென் றெண்ணிக் கண்ணிய சீற்றந் தீர்ந்தான்.

(இ - ள்.) புயல் நிறம் வண்ணன்-மேகத்ினது நிறம்போன்ற நிறத்தையும் குணம்போன்ற குணத்தையு முடையவனான ஸ்ரீராமன், அ புண்ணியன் ஆண்டு புகன்ற சொல்லை - நல்வினையுடையவனான அச்சடாயு அப்பொழுது சொன்ன வார்த்தையை, இது தயரதன் பணி என்ன சிந்தையில் தழுவி நின்றான்-'இது தசரதசக்கரவர்த்தியினது கட்டளையே' என்று(அதனைத்தவறாது எற்றுக்கொள்ளுதல்போலத்) தன்மனத்தில் எற்றுக்கொண்டுநின்றவனாய்,— 'இனி—, அயல் முனிவது என்னை-பிறரைக் கோபித்தலில் யாதுபயன்? அரக்கர்தம் வருக்கம் தீர்க்கும் செயல் இனி செயல்-இராக்கதர்களை இனத்தோடு அழிக்குந்தொழிலே இனிச்செய்யத்தக்க செயலாகும்,' என்று எண்ணி-என்று நினைத்து, கண்ணிய சீற்றம் தீர்ந்தான் - (உலகத்தார்மேல்)மனத்திற்கருதிய கோபந்தணிந்தான்; (எ - று.)

சடாயுவின்வார்த்தையைத் தந்தைவார்த்தையாகவே பாவித்துத் தலைமேற்கொண்டு நன்குமதித்தனன், பித்ருவாக்யபரிபாலநசீலனான இராமபிரானென்க. பி - ம்:—[1]தாங்கி. [2]அரக்கரை. (௧௦௨௪)

## ௨௧௫.—பின்பு சடாயு உயிர்நீத்தல்.

ஆயபி னமலன் றானு [1]மையநீ யமைதி யென்ன
வாயிடை மொழிந்த தன்றி மற்றொரு செயலு முண்டோ
போயதவ் வரக்க னெங்கே புகலெனப் புள்ளின் வேந்த
னோய்வின [2]னுணர்வுந் தேய வுரைத்தில னுயிருந் தீர்ந்தான்.

(இ - ள்.) ஆயபின் - (இவ்வாறு) ஆனபின்பு [கோபந்தணிந்தபின்பு], அமலன்தானும் - குற்றமற்றவனான இராமபிரானும், (சடாயுவைநோக்கி), 'ஐய-தந்தையே! நீ—, அமைதி என்ன வாயிடை மொழிந்தது அன்றி-(கோபங்கொள்ளாது) பொறுமையோடிரு என்று (உனது) வாயினாற் சொல்லியபடியே (நான்) நடத்தலல்லாமல், மற்று ஒரு செயலும் உண்டோ - (அதற்கு) மாறானதொரு செயலும் (நான் செய்தற்கு உரியது) உண்டோ? (இதுநிற்க); அ அரக்கன் போயது எங்கே புகல்-அந்தஇராக்கதன் [இராவணன்] சென்றது எவ்விடத்தில்? (அதனைச்) சொல்வாய்,' என-என்றுசொல்ல, (அவ்வளவிலே), புள்ளின் வேந்தன் - பறவைகளுக்குத் தலைவனாகிய [சிறந்த பறவையான] சடாயு, ஓய்வினன் - தளர்ச்சியையுடையவனாய், உணர்வும் தேய - அறிவும் குறைபட, உரைத்திலன் - (அதற்கு மறுமொழியொன்றும்) கூறமாட்டாதவனாய், உயிரும் தீர்ந்தான் - உயிரும் நீங்கினான்; (எ - று.)

எனது தந்தையாகிய நீ என்னைநோக்கி 'முனிவாயல்லை' என்று திருவாய் மலர்ந்தருளிய கட்டளையின்படி நான் அமைதிகொண்டிருத்தலேயன்றி அதற்குமாறான கோபச்செயலொன்றையுஞ் செய்யமாட்டேனென்று தனது உடன்பாட்டைவெளியிடுவான், 'ஐய நீ யமைதியென்ன வாயிடைமொழிந்த தன்றி மற்றொருசெயலுமுண்டோ' என்றான். [1]ஐயனீ! என்ற பாடம்-தந்தையாகிய நீயென்று'பொருள்படும். இங்ஙனம்எம்பெருமானுக்குத் தன்னாலியன்ற வளவும் உதவிய சிறப்புநோக்கி, இப்படிப்பட்ட சிறப்புவாய்ந்த பறவை வேறொன்றுஇல்லை யென்பது பட, 'புள்ளின்வேந்தன்'என்றார். ஓய்வினன்-இந்திரியங்களின் செய்கை ஓய்ந்தவனாய். ஈற்றடியிலுள்ள உம்மைகள் இரண்டும், எச்சப்பொருளன. பி - ம்:—[1]அரச. [2]உணர்வு. (௧௦௨௫)

## ௨௧௬.—சடாயு பரமபதமடைதல்.

சீதங்கொண் மலரு ளோனுந் தேவரு மென்ப தென்னே
வேதங்கள் [1]காண்கி லாமை வெளிநின்றே மறையும் வீரன்
பாதங்கள் கண்ணிற் பார்த்தான் [2]படிவங்கொ ணெடிய பஞ்ச
பூதங்கள் விளியு நாளும் போக்கிலா வுலகம் புக்கான்.

(இ - ள்.) சீதம் கொள் மலர் உளோனும் - குளிர்ச்சியைக் கொண்ட தாமரைமலரில் தோன்றியவனான பிரமனும், தேவரும்-மற்றையதேவர்களும்,

(காணுதற்குஅரியவன்), என்பது என்னே-என்பதைப்பற்றிக் கூறவேண்டுவது என்ன ? வேதங்கள் காண்கிலாமை - (பகவானுடையசொரூபத்தை உணர்ந்து வெளியிடுதற் கென்றே அமைந்த)வேதங்களுங் காணமுடியாமல்,வெளி நின்றே - (அவற்றிற்கும் எட்டாது) புறத்தேநின்று, மறையும் - மறைகின்ற சொரூபத்தையுடைய, வீரன் - மகாவீரனான திருமாலினுடைய [இராமபிரானது], பாதங்கள்-திருவடிகளை, கண்ணின் பார்த்தான்-(தனது) கண்களால் (அந்திமதசையிலே) தரிசிக்கப்பெற்றானாதலின், (சடாயு), நெடிய படிவம் கொள் பஞ்ச பூதங்கள் விளியும் நாளும் போக்கு இலா உலகம் புக்கான்-பெரிய வடிவத்தைக்கொண்ட (நிலம் நீர் தீ காற்று வான மென்னும்) ஐம்பெரும்பூதங்களும் அழியுங் கற்பாந்தகாலத்திலும் அழிதலில்லாத ஸ்ரீ வைகுண்டலோகத்தை அடைந்தான்; (எ - று.)

"உறுகால்கிளர் பூதமெலா முகினும், மறுகா நெறி" என்றார், சரபங்கர் பிறப்புநீங்குபடலத்தும். பி-ம்:—[1]காண்கிலாதான். [2]படிவங்கள் (௧௦௨௬)

**௨௧௬.—அப்பொழுது அனைவரும் இரங்கலும், சடாயுவை நன்குமதித்தலும்.**

வீடவ னெய்தும் வேலை விரிஞ்சனே முதல மேலோ
ராடவர்க் கரச னோடு [1]தம்பியு மழுது [2]சோரக்
காடமர் மரமு[3]மாவுங் கற்களுங் கரைந்து சாய்ந்த
சேடரும் [4]பாருளோருங் [5]கரஞ்சிரஞ் சேர்த்தா ரன்றே.

(இ - ள்.) அவன் வீடு எய்தும் வேலை-அந்தச்சடாயு (உயிர்நீத்து) முத்தியையடையுஞ் சமயத்தில், ஆடவர்க்கு அரசனோடு - புருஷோத்தமனான இராமனும், தம்பியும்-இளையபெருமாளும், அழுது சோர - புலம்பிமெலிய,—காடு அமர் - காட்டிற் பொருந்திய, மரமும் - மரங்களும், மாவும்-மிருகபட்சிகளும், கற்களும் - மலைகளும், கரைந்து சாய்ந்த - (இரக்கத்தால்) கரைந்து தளர்ந்தன; விரிஞ்சனே முதல மேலோர்-பிரமன்முதலிய மேலுலகத்தார்களும், சேடரும் - (கீழுலகத்தவரான) நாகர்களும், பாருளோரும் - (இடையிலுள்ளதான) நிலவுலகத்தி லுள்ளாரும், (ஆக மூவுலகத்தோரும்), கரம் சிரம் சேர்த்தார் - (சடாயுவின்பக்கலுண்டான நன்குமதிப்பினால்) கைகளைத் தலைமேற்சேர்த்தார்; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

அனைவரும் தலைமேற் கைவைத்துத் திரியங்கநமஸ்காரஞ்செய்தனரென்பதாம். [5]கரஞ்சிரஞ்சேர்ந்தவன்றே என்றபாடத்திற்கு - அவரவரின் உள்ளத்தின்முயற்சியின்றியே ஆநந்தபரவசத்தால் கைகள் தாமே தலைமேற்குவிந்தனவென்பது விளங்க, 'கரம்சிரஞ் சேர்ந்த' என்று கைகளின் மேல் வைத்துக் கூறினாரென்க. இனி, 'கரம் சிரம் சேர்ந்த' என்பதற்கு - சடாயுமரிக்கையில் மக்கள் தேவர் நாகர் அனைவரும் தலையிற்கைவைத்துச் சோகிப்பாராயினர் என்னுங் கருத்துப்பட வுரைத்தலுமுண்டு. எல்லாப்பொருள்களும் எம்பெருமானுடைய சொரூபமேயாதலால், அப்பெருமான் அழுதுசோர்கையில் அப்பொருள்கள்யாவும் கரைந்து சாய்ந்தன வென்க. மா-விலங்கு. சேடர்=சே

னை.விரிஞ்சனே, ஏ-உயர்வுசிறப்பு. பி-ம்:—[1]நம்பியும். [2]சோர்ந்தார். [3]புள்ளும். [4]பாரினோர்க்கும். (கoஉஎ)

உகஎ.—பின்பு இராமன் தம்பியைநோக்கிக் கூறிய இரங்கன் மொழி.

அறந்தலை நின்றி லாத [1]வரக்கனி னாண்மை [2]தீர்ந்தேன் [லாய்
றுறந்தனென் றவஞ் செய்கேனோ துறப்பெனோ வுயிரைச் சொல்
பிறந்தனென் பெற்று நின்ற பெற்றியாற் பெற்ற தாதை
யிறந்தன னிருந்து ளேன்யா னென்செய்கே னிளவ லென்றான்.

(இ - ள்.) இளவல் - தம்பி! அறம்தலை நின்றிலாத அரக்கனின் ஆண்மை தீர்ந்தேன் - தருமத்தில் நிலைநிற்றலில்லாத அரக்கனால் ஆண்மையை இழந்தவனான நான், துறந்தனென் தவம் செய்கேனோ - முற்றத்துறந்து தவஞ் செய்வேனோ? உயிரை துறப்பெனோ - உயிரை விட்டுவிடுவேனோ? சொல்லாய் - (இவ்விரண்டில் எதுதக்கது?) சொல்வாய்; பெற்று நின்ற பெற்றியால் - (என்னை மகனாகப்) பெற்றுநின்ற பேற்றினால், பெற்ற தாதை இறந்தனன் - பெற்றதந்தை இறந்துபோனான்; பிறந்தனென் யான் இருந்துளேன் - (மகனாகப் பிறந்தவனான யான் இறவாமல் இருந்துள்ளேன்; என் செய்கேன் - யாது செய்யக்கடவேன்? என்றான் - என்றுகூறினான்; (எ - று.)

கொடிய அரக்கனது வஞ்சனைக்கு உள்ளாகி மனைவியையிழந்து மானங் கெட்டேனென்பான், 'அறந்தலைநின்றிலாத அரக்கனின் ஆண்மைதீர்ந்தேன்' என்றான். 'பெற்றதாதையிறந்தனன்' என்றது - இரட்டுறமொழிதலால், தன்னைப்பிரிந்தன் நிமித்தம் தசரதன் இறந்ததையும், தனதுமனையாளைப் பாதுகாத்து உதவலின்நிமித்தம் சடாயு இறந்ததையும் குறிக்கும். சடாயுவை 'பெற்றதாதை' என்றது, உபசாரம். என்தந்தை எனக்காக இறந்ததனால், அவன் செய்யும் கடமை தீர்ந்தது: மைந்தனாகிய யான் அவனுக்காக இறவாமல் உயிர்த்திருத்தலால், யான்செய்யுங் கடமை தீர்ந்திலது என்று பிரலாபித்தனனென்க. பி - ம்.—[1]ஆதனென். [2]வீந்தேன். (கoஉஅ)

உகஅ.—இலக்குமணன் 'அரக்கரையழித்தலே செய்தற்பாற்று' என்றல்.

என்றலு மிளைய [1]கோவு மிராமனை யிறைஞ்சி யாண்டும்
வென்றியாய் விதியின் றன்மை [2]பழியல [3]விளைந்த தொன்றோ
நின்றினி நினைவ தென்னை நெருக்கியவ் வரக்கர் தம்மைக்
கொன்றபி னன்றோ வெய்ய கொடுந்துயர் குளிப்ப தென்றான்.

(இ - ள்.) என்றலும் - என்று (இராமன்) கூறியவளவிலே, இளைய கோவும் - இளையபெருமாளும், இராமனை இறைஞ்சி - அவ்விராமபிரானை வணங்கி, 'வென்றியாய் - வெற்றியை யுடையவனே! யாண்டும் - எப்பொழுதும், விதியின் தன்மை அல விளைந்தது பழி ஒன்றோ - ஊழ்வினையின் தன்மையாலன்றி நேர்ந்ததொரு தீங்கு உண்டோ? இனி நின்று நினைவது என்னை - இனி (க்காலதாமதப்பட்டு) நின்று சிந்தித்தலில் யாதுபயன்? அ அரக்கர்தம்மை நெருக்கி கொன்றபின் அன்றோ வெய்ய கொடு துயர் குளிப்பது - அந்த

இராக்கதர்களை(ப்போரில்)நெருக்கிக் கொன்றபின்பன்றோ வெவ்வியகொடிய துயரத்தில் மூழ்கவேண்டுவது, என்றான் - என்றுகூறினான்; (எ - று.)

ஊழ்வினையாலன்றி வருவதொரு தீங்கு இல்லை யாகையாலும், அவ் வினைப்பயன் தடுக்கவொண்ணா தாதலாலும், கழிவிரக்கத்தோடு சிந்தித்தலிற் பயனில்லை; சீதையை யிழந்ததற்காகவும், சடாயு உயிர்நீத்ததற்காகவும் இரங் குதலினும் முந்திச்செய்யவேண்டுவது, இவற்றிற்குக் காரணமான அவ்வரக் கர்களைக் கொன்று பழிதீர்த்தலே யென்றானென்க. வெய்ய கொடு - ஒரு பொருட்பன் மொழி. பழி - பழிக்கப்படுவது: தீங்கு. பி-ம்:—[1]கோவல்லிறை வனே. [2]இவன்முதல், பழியில. [3]விளைந்ததன்றோ. (கoஉகூ)

உகக.—இதுவும் அது.

எந்தைநீ யியம்பிற் [1]றென்னை [2]யெண்மைய னாகி யேழைச்
சந்தவார் குழலி னாளைத் துறந்தனை தணிதி யேனு
முந்தையை யுயிர்[3]கொண் டானை யுயி[4]ருண்ணு மூற்ற மில்லாச்
சிந்தையை யாகி நின்று [5]செய்தவஞ் செய்கை யென்றான்.

(இ - ள்.) எந்தை - எனது தலைவனே! நீ—, எண்மையன் ஆகி - எளிய தன்மையை மேற்கொண்டவனாய், ஏழை சந்தம் வார் குழலினாளை துறந்தனை தணிதி எனும் - (பெண்டிர்க்குஉரிய) பேதைமைக்குண முடையளான அழ கியநீண்டகூந்தலையுடைய சீதையைக் கைவிட்டுத் தணிவுகொள்வாயாயினும் உந்தையை உயிர்கொண்டானை உயிர் உண்ணும் ஊற்றம் இல்லா சிந்தையை ஆகி நின்று செய் தவம் செய்கை இயம்பிற்று என்னை - உனது தந்தையைக் கொன்ற அரக்கனைக் கொல்லும் முயற்சி யில்லாத மனத்தையுடையவனாய் நின்று சிறந்ததவத்தைச்செய்தலைக் கூறியது என்னே! என்றான் - என்றும் (இராமனைநோக்கி இலக்குமணன்) கூறினான்; (எ - று.)

சீதையை எடுத்துப்போனதற்காக அவளிடம் உனக்குள்ள காதலால் இராவணனைக் கொல்லவேண்டும்: அங்ஙன் கொல்லுதற்கு நீ துணியாமல் அவளை முற்றும் துறந்துவிடக் கருதினையாயினும், நமதுதந்தையான சடா யுவைக் கொன்றதற்காக அவனிடம் நமக்குஉள்ள உறவுரிமையாலாவது இராவணனைக் கொல்லவேண்டாவோ? அங்ஙனமுமன்றித் தவத்தை மேற் கொள்வதாகக்கூறியது தகுதியன்றேயென்றனனென்க. 'தமையன் தந்தையோடொப்பான்' என்ற நூற்கொள்கையின்படி, இராமனை இலக்கு மணன் எந்தையென விளித்தான். 'ஏழை'யென்றது, குழலினாளுக்கு அடை மொழி. நீ எண்மையனாகி - இடவழுவமைதி; 'எண்மையையாகி' என்றிருப் பின், வழாநிலையாம். பி-ம்:—[1]என்னே. [2]எளிமையையாகி. [3]கொண்டோனை. [4]கொள்ளும். [5]செய்வதென். (கoங௦)

உஉ௦.—இராமன் 'இனிச் சடாயுவுக்குச் சரமக்கிரியை செய்வோம்'என்றல்.

அவ்வழி யிளவல் கூற வறிவனு மயர்வு நீங்கி
யிவ்வழி யினைய [1]வெண்ணி னேழைபைப் பாலதென்னா

வெவ்வழி பொழியுங் கண்ணீர் விலக்கினன் விளிந்த தாதை
செவ்வழி யுரிமை [2]யாவுந் [3]திருத்துவஞ் சிறுவ வென்றான்.

(இ - ள்.) இளவல் - இளையபெருமாள், அ வழி கூற - அவ்வாறுசொல்ல, அறிவனும்-யாவும்அறியும் முற்றுணர்வுடையவனான இராமபிரானும், இ வழி இனைய எண்ணின் ஏழைமைப்பாலது என்னா-'இப்பொழுது [அல்லது இவ் விடத்தில்] இத்தன்மையனவான சிந்தைகளைச் சிந்தித்திருந்தால் அது அறி வின்மையின்பாற்பட்டதே' என்று தானும் திருவுள்ளத்திற்கொண்டு, அயர்வு நீங்கி-(அதனால்) சோர்வழிந்து, வெம் வழி பொழியும் கண் நீர் விலக்கினன்- கொடியதுன்பங் காரணமாகச் சொரிகிற கண்ணீரை நீக்கினவனாய், (இலக் குமணனைநோக்கி), 'சிறுவ - தம்பி! விளிந்த தாதை - இறந்ததந்தையான சடா யுவுக்கு, உரிமை யாவும் - செய்யவேண்டிய கடமைக ளெல்லாவற்றையும், செம் வழி திருத்துவம் - செவ்வியமுறைமையால் திருந்தச்செய்வோம்', என் றான் - என்றுகூறினான்; (எ - று.)

"அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை, யின்மையா வையா துலகு", "நுண்ணுணர் வின்மை வறுமை" என்ப வாதலால், அறிவின்மை 'ஏழைமை' எனப்பட்டது. பி - ம்:—[1]எண்ணல். [2]யானே. [3]திருத்துவன். ()

உ௨௧.—இதுமுதல் நான்குகவிகள் - சடாயுவுக்கு இராமன் அந்திமக்கிரியைசெய்தலைக் கூறும்.

இந்தன [1]மெனைய வென்னக் [2]காரகி லீட்டத் தோடுஞ்
சந்தனங் குவித்து வேண்டுந் தருப்பையுந் திருத்திப் பூவுஞ்
சிந்தினன் [3]மணலின் வேதி தீர்தர வியற்றித் தெண்ணீர்
தந்தனன் றாதை தன்னைத் [4]தடக்கையா னெடுத்துச் சார்வான்.

(இ-ள்.) இந்தனம் எனைய என்ன - விறகுகள் எத்தன்மையன வென்று (காண்பவர்) வியக்கும்படி, கார் அகில் ஈட்டத்தோடும் - கரிய அகிற்கட்டை களின் கூட்டத்துடனே, சந்தனம் - சந்தனக்கட்டைகளையும், குவித்து-(காஷ் டமாகக்) கொண்டுவந்துசேர்த்து, வேண்டும் தருப்பையும் திருத்தி - வேண் டியதருப்பைப்புற்களையும் திருத்தமாக அமைத்து, பூவும் சிந்தினன் - மலர் களையும் கொணர்ந்துவைத்து, மணலின் வேதி தீர்தர இயற்றி - மணலினால் மேடையை அமையச்செய்து, தெள் நீர் தந்தனன் - தெளிவானநீரைக்கொ ணர்ந்து வைத்துக்கொண்டு,-தாதைதன்னை தட கையான் எடுத்து சார்வான்- (இராமன் தனது)தந்தையான சடாயுவைப் பெரியகைகளால் எடுத்துக்கொ ண்டு (இந்தனங்குவித்துவேதியமைத்தவிடத்தில்) சேர்பவனானான்; (எ - று.)

அந்திமக்கிரியைசெய்தற்கு வேண்டிய விறகு தருப்பை பூ சந்தனம் தண் ணீர் இவைகளைச் சித்தமாகக் கொணர்ந்து வைத்துக்கொண்டமையும், மணல் மேடையமைத்துவைத்தமையும், இதிற் கூறப்பட்டன. பி - ம்:—[1]ஆகவேண் டும். [2]காழகில். [3]அரணிதன்னாற்றீக்கடைந்து, அரணிதன்னில் தீக்கடைந்து, மணலின் வெந்தீத்தருக்கடைந்து, மணலின் வெந்தீத்தருக்கடிது. [4]தடக் கைமீது.

உஉஉ. ஏந்தின னிருகை தன்னா லேற்றின னீமந் தன்மேற்
சாந்தொடு மலரு நீருஞ் சொரிந்தனன் றலையின் [1]சாரல்
காந்தெரி கனலை மூட்டிக் கடன்முறை கடவா வண்ணம்
நேர்ந்தன னிரம்பு நன்னூன் மந்திர நெறியின் வல்லான்.

(இ - ள்.) நிரம்பும் நல் நூல் மந்திரம் நெறியின் வல்லான் - நிறைந்த நல்லசாஸ்திரங்களிற்கூறிய மந்திரங்களின்முறைமையில் வல்லவனான இராமபிரான்,—நீரும் சாந்தொடு மலரும் சொரிந்தனன்-நீரையும் சந்தனத்தையும் புஷ்பங்களையும் (உரியபடி) உபயோகித்து [உயிர்நீத்த உடலுக்குத் திருமஞ்சனமும் அலங்காரமும் செய்து என்றபடி]; (அவ்வுடலை), இரு கைதன்னால் ஏந்தினன் ஈமந் தன்மேல் ஏற்றினன்-(தனது) இரண்டு கைகளாலும் எடுத்து (மணல்மேடையில் அமைத்த) அவ்விறகடுக்கின்மேல் இட்டு, தலையின் சாரல் காந்து எரி கனலை மூட்டி - தலைப்பக்கத்திலே எரிகிற நெருப்பைப் பற்றவைத்து, கடன் முறை கடவா வண்ணம் நேர்ந்தனன்-மற்றும் (அப்பொழுது)செய்யவேண்டிய கடமைகளை முறைதவறாதபடி செய்தான்; (எ - று.)—

**பி - ம்:**—[1]வைத்து. (க0ாடு)

உஉ௩. [1]கிளித்தன [2]களித்த மேனி [3]தாமரைக் கெழுவு செம்பூத்
துளித்தன வனைய வென்னத் துள்ளிசோர் வெள்ளக் கண்ணன்
குளித்தனன் கொண்ட [4]லாற்றுக் குளித்தபின் கொண்ட [5]நன்னீ
ரளித்தன னரக்கர்ச் செற்ற சீற்றத்தா னவலந் [6]தீர்ந்தான்.

(இ - ள்.) அரக்கர் செற்ற சீற்றத்தான் அவலம் தீர்ந்தான் - இராக்கதர்களை அழிக்கவேண்டுமென்ற கோபத்தால்(சீதையையிழந்த)துன்பம் சிறிது தணிந்தவனான இராமபிரான், —கிளித்து அன-கிளியினதுநிறத்தை யொத்த [பசுஞ்சாமநிறமுள்ள], களித்த மேனி - செழிப்புற்ற தனதுதிருமேனியிலே, தாமரை கெழுவு செம் பூ துளித்தன அனைய என்ன - செழித்த செந்தாமரை மலர்கள் தேன்துளித்தவற்றைப் போல்வன வென்று சொல்லும்படி, வெள்ளம் துள்ளி சோர் கண்ணன் - நீர்ப்பெருக்கு வழிகிற கண்களையுடையவனாய், கொண்டல்-மேகம்போல, ஆறு - நதியிலே, குளித்தனன் - நீராடினான்; குளித்த பின் - நீராடியெழுந்த பின்பு, கொண்ட நல் நீர் அளித்தனன்-(தன் கையிற்) கொண்ட நல்லநீரை (ச்சடாயுவுக்கு) த்தர்ப்பணமாகக் கொடுத்தான்.

கிளியின்நிறமும்,இராமபிரானது திருநிறமும் தம்மில்ஒத்திருத்தல்பற்றி, 'கிளித்தன களித்தமேனி' என்றார். இங்ஙனம் இராமனது திருமேனி நிறத்துக்குக்கிளியினதுநிறம் உவமைகூறப்படுதலை, "நன்கெண்ணி நான் வளர்த்த சிறு கிளிப்பைதலே, * * * **நின்பசுஞ்சாமநிறத்தன்**" என்ற திருவாய்மொழிப்பாசுரங்கொண்டு உணர்க. கிளித்து - கிளியென்ற பெயரின்மேற் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்பெயர்; 'கைத்து' என்பது போல; து-விகுதி. அன-அன்ன;தொகுத்தல். கண்களுக்குத் தாமரைப்பூவும் அவைசொரியும் கண்ணீர்க்குத் தாமரைசொரியுந் தேனும் உவமை. துள்ளி-விரித்தல். **பி - ம்:**—[1]தளிர்த்தன. [2]கிளர்ந்தபச்சை, அனையமேனி. [3]தாமரை கெழுவுஞ் செந்தேன். [4]ஆற்றில். [5]கொண்டல். [6]தீர்ப்பான். (ச0௱)

உஉச. மீட்டினி யுரைப்ப தென்னே விரிஞ்சனே முதல மேல்கீழ்
காட்டிய வுயிர்க ளெல்லா மருந்தின களித்த போலாம்
பூட்டிய கைக ளாலப் புள்ளினுக் கரசைக் கொள்கென்
றூட்டிய நன்னீ ரைய னுண்டநீ ரொத்த தன்றே.

(இ - ள்.) விரிஞ்சனே முதல - பிரமன்முதலிய, மேல் கீழ் காட்டிய- உயர்ந்தவையாகவும் தாழ்ந்தவையாகவும் குறிக்கப்பட்ட, உயிர்கள் எல்லாம்- சீவராசிகள் யாவும், அருந்தின களித்த போல் ஆம் - (இராமன் சடாயுவுக்குச் சலதர்ப்பணங்கொடுத்தவளவிலே தாம்தாம்) உண்டுகளித்தவைபோல ஆயின; அ புள்ளினுக்கு அரசை-பறவைக்குஅரசனான அச்சடாயுவைக்குறித்து, கொள்க என்று - ஏற்றுக்கொள்வாயாக வென்று சொல்லி, பூட்டிய கைகளால்-சேரவைத்த (தனது) கைகளால், ஊட்டிய - உண்பித்த [தர்ப்பணம் கொடுத்த], நல் நீர் - நல்லஅந்தநீரானது, ஐயன் உண்ட நீர் ஒத்தது அன்றே- இராமபிரானாகிய திருமால் தானேஉட்கொண்ட நீரைப் போன்றதன்றோ! மீட்டு இனி உரைப்பது என்னே - (அந்த வாஸோதக திலோதகத்தின் மகிமையைப்பற்றி) மற்றும்சொல்லவேண்டுவது யாது? (எ - று.)

எம்பெருமான் சிறிதுஉணவை உட்கொண்டவளவிலே, அவ்வெம்பெருமானது சொரூபமான ஜீவராசிகள் தாம்தாம்உண்டனபோல நிறைவுறுதல், இயல்பு; (இதனை மகாபாரதத்துத் துர்வாசமுனிச்சருக்கத்து வரலாறு கொண்டும்உணர்க.) சடாயுக்கு இராமன் தர்ப்பணஞ்செய்தவளவிலே, அச்சடாயுவின் உயிரேயன்றி அனைத்துயிரும் உண்டுகளித்தனபோ லானதனால், அந்நீர் ஐயனுண்டநீரையொத்த தென்றார். 'மீட்டினியுரைப்பதென்னே' என்றது, அந்தத் தர்ப்பணசலத்தின் மகிமையை நன்குவிளக்குமாறு பாராட்டிக்கூறியது. பூட்டியகைகள் - சேரங்கை. அன்றே - தேற்றம். (க௦ஙரு)

உஉரு.—சூரியாஸ்தமன வருணனை.

பல்வகைத் துறையும் வேதப் பலிக்கடன் பலவு முற்றி
[1]வெல்வகைக் குமர னின்ற வேலையின் வேலை சார்ந்தான் [து
றொல்வகைக் குலத்தின் வந்தான் றுன்பத்தாற் புனலுந் தோய்ந்
செல்வகைக் குரிய வெல்லாஞ் செய்குவா னென்ன வெய்யோன்.

(இ - ள்.) வெல் வகை குமரன் - வெற்றிபெறும்வகையில்வல்ல சக்கரவர்த்தித்திருமகன், பல்வகை துறையும்,—(பித்ருக்களைக்குறித்துச் செய்யும்) பலவகைச்சடங்குகளையும், வேதம் பலி கடன் பலவும் - மற்றும் வேதவிதிப்படிசெய்தற்குஉரிய பிண்டபலிமுதலியகடமைகள்பலவற்றையும், முற்றிநின்ற வேலையின் - முடித்துநின்ற சமயத்திலே,—வெய்யோன் - சூரியன், தொல் வகை குலத்தின் வந்தான் துன்பத்தால் - தொன்றுதொட்டுவரும் வகையையுடைய (தனது)குலத்திலே தோன்றியவனான சடாயுவின் மரணங்காரணமாக நேர்ந்த துன்பத்தால், புனலும் தோய்ந்து - (தானும்) நீராடி, செல்

வகைக்கு உரிய எல்லாம் செய்குவான் என்ன-அவன்செல்லுங்கதிக்கு உதவுகிற சடங்குகளையெல்லாம் செய்யத்தொடங்குபவன்போல, வேலை சார்ந்தான்-மேல்கடலை அடைந்தான்; (எ - று.)

சூரியகுலத்தில் அவதரித்த இராமனுக்குத் தந்தைமுறைபூண்ட சம்பந்தத்தால், சடாயுவைச் சூரியகுலத்திலுதித்தவனாகக் கற்பித்து, 'தொல்வகைக் குலத்தின் வந்தான்' என்றனரென்க: அன்றியும், காசியபமுனிவனது மனைவிமார் பதின்மூவருள் அதிதியின் குமாரன் சூரியன்; விநதையின்மகனான அருணனது புதல்வன் சடாயு; ஆகவே, சூரியனுக்குச் சடாயு புத்திரனாதல் காண்க. இனி, 'தொல்வகைக்குலத்தின்வந்தான் துன்பத்தால்' என்பதற்கு - தனது குலத்திற் பிறந்தவனான இராமனுக்கு நேர்ந்த மனத்துயரம் காரணமாக என்று உரைத்தல், அத்துணையாச்சிறவாது. சூரியன் கடலில்மூழ்குதற்குக்காரணமாகாததொன்றைக் காரணமாகக் கவி கற்பித்துக்கூறியதனால், **ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி - ய்:—**[1]வில். (௬௦௩ ௬)

இப்படலத்திற் கூறிய வரலாற்றில், சீதை இலக்குமணன்விஷயமாகக் கொண்ட கருத்தினாலும், கூறிய சொற்களினாலும், அவற்றின்பயனாக உடனே அடைந்த தீங்கினாலும், 'பெண்புத்தி பின்புத்தி' என்பது நன்குவிளங்கும். அன்றியும், லக்ஷ்மணன்விஷயத்தில் அவள் சொன்ன சொற்கள் அவளுக்கு உடனே தீமைவிளையக்காரணமானமை, 'பாகவதாபசாரம்உடனேபெருந்தீங்கு பயக்கும்' என்றஉண்மைநிலையை உணர்த்துதல் காண்க: சடாயுவின் செயலால், பெரியோர் தமதுஉயிர்கொடுத்தாயினும் தம்மையுற்றாரது துன்பத்தைத் தம்மாலியன்றவளவு தீர்த்தற்குத் துணிவரென்பது புலனாம். இராம தரிசனத்தால் சடாயுவுக்குப் பரமபதங்கிடைத்தமை, அவ்விராமபிரானே முழுமுதற்கடவுள் என்பதற்குச் சாட்சியாம். இராமன் சடாயுவுக்குத் தீக்கடன் நீர்க்கடன் முதலியன செய்துமுடித்ததனால், அப்பெருமானது செய்ந்நன்றி மறவாப்பெருந்தகைமை வெளியாகின்றது.

**முதனூலோடு மாறுபாடு:—**'இராவணன், சீதையைக் கைகளால் தொட்டு எடுத்து மடியில் வைத்துக்கொண்டு தேரேறிச் சென்றனன்' என்று ஸ்ரீ வால்மீகி கூறியுள்ளார்.

சடாயுவுயிர்நீத்த படலம் முற்றிற்று.

## ௬.—ஆவது அயோமுகிப்படலம்.

அயோமுகியினது சம்பந்தமான படல மென்றாவது, அயோமுகியைப் பற்றிய படல மென்றாவது விரியும். அயோமுகீ என்ற வடமொழிப்பெயர்-இரும்பினாலாகியதுபோன்ற முக முடைய ளென்று பொருள்படும். சடாயுவுக்குக் கிரியைசெய்துமுடித்த இராமபிரான் மிக்கவருத்தத்தோடு தம்பியுடனே சானகியைத்தேடிக்கொண்டு வனத்திற் செல்லுகையில் தாகங்கொண்டு இலக்குமணனைநோக்கி 'தண்ணீர்வேண்டும்' என்ன, அவ்விளையபெரு

மாள் நீர் கொண்டுவருதற்குச் சென்ற வழியிலே, அயோமுகியென்னுங் கொடியஅரக்கி அவ்விலக்குமணன்மேற் காதல்கொண்டு மோகனமந்திரபலத்தால் அப்பெருமானை மயக்கி வலியத் தழுவியெடுத்துச் செல்லுமளவில், மோகம் நீங்கிய லக்ஷ்மணன் அவளுடைய மூக்கைத் துணித்து அவளையகற்றி மீண்ட செய்தி, இப்படலத்திற் கூறப்படுகின்றது.

**க.—இராமலக்ஷ்மணர் ஒருமலையிற் சேர்தலும், இருள் மிகுதலும்.**

அந்திவந் தணுகும் வேலை யவ்வழி [1]யவரு நீங்கிச் [டா
சிந்துரச் [2]சென்னித் தாண்டோர் மைவரைச் சேக்கை [3]கொண்
ரிந்திரற் கடங்கல் செல்லா விராக்கத ரெழுந்த தென்ன
வெந்துயர்க் கூற்ற மாய விரியிருள் வீங்கிற் றன்றே.

(இ - ள்.) அந்தி வந்து அணுகும் வேலை - மாலைப்பொழுது வந்து சேரும் வேளையிலே, அவரும் - அவ்விராமலக்குமணரும், அ வழி நீங்கி - (சடாயுவுக்குக் கிரியைசெய்துமுடித்த) அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு, ஆண்டு - அவ்வனத்திலே, சிந்துரம் சென்னித்து ஓர் மை வரை சேக்கை கொண்டார்-சிந்தூரப்பொடிகள்நிறைந்த சிகரத்தையுடையதாகிய மேகந்தவழும் [பெரிய] மலையொன்றை (ச்சந்தித்து அதனை)த்தங்குமிடமாகக் கொண்டார்கள்; (பின்பு), வெம் துயர்க்கு ஊற்றம் ஆய விரி இருள் - கொடியதுன்பத்துக்குஇடமான பரந்த இருளானது, இந்திரற்கு அடங்கல் செல்லா இராக்கதர் எழுந்தது என்ன - இந்திரனுக்கு அடங்காத கொடிய இராக்கதர்கள் கிளம்பினாற்போல, வீங்கிற்று - மிக்குத்தோன்றிற்று; (எ - று.)—அன்றே-ஈற்றசை.

காமோத்தீபகமாகிய இருட்பொழுது சீதையைப்பிரிந்த இராமனதுவிரகவேதனையை மிகுவித்தற்குக் காரணமாகு மென்பார், 'வெந்துயர்க்கு ஊற்றமாய விரியிருள்' என்றார். 'அவருநீங்கிச்சேர்ந்தார்' என்ற உம்மை - கீழ்க்கவியில்வந்த "வெய்யோன் வேலை சார்ந்தான்" என்றதை நோக்குதலால், இறந்ததுதழுவிய எச்சப் பொருளது. பின்னிரண்டடி - உவமையணி. வெம் துயர் கூற்றம் ஆயஎனப்பிரித்து,கொடிய துயரத்தைச்செய்யும் யமன்போன்ற பேரிருள்எனினும் அமையும்; கொடுமைக்கும், கருமைக்கும் உவமை. சிந்துரச்சென்னித்து என்பதற்கு - யானைகள்பொருந்தப்பெற்ற உச்சியையுடையது என்றும் பொருள் கொள்ளலாம்; ஸிந்தூரம் - யானை: வடசொல். சென்னித்து - ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். பி - ம்:—[1]அயரும், [2]சென்னிக்காட்டோர், செந்நீக்காட்டோர். [3]சேர்ந்தார், சார்ந்தார். (கo௩எ)

**உ.—இராண்டுகவிகள்-அவர்கள் அவ்விரவில் மிகப்பரிதபித்தலைக் கூறும்.**

[1]தேனுக வருவி சிந்தித் தெருமர லுறுவ போலக்
கானமு [2]மலையு மெல்லாங் கண்ணினீ ருகுக்குங் [3]கங்குன்
மானமுஞ் சினமுந் தாதை மரணமு மைந்தர் சிந்தை
ஞானமுந் துயருந் தம்முண் [4]மலைவென நலிந்த வன்றே.

(இ - ள்.) கானமும் மலையும் எல்லாம் - காடுகளும் மலைகளு மாகிய யாவும், தெருமரல் உறுவ போல - (இராமலக்குமணர்க்கு நேர்ந்த துயரத்திற்காகத் தாம்) சோகித்தலை அடைவனபோல, தேன் அருவி உக சிந்தி கண்ணின் நீர் உகுக்கும் - தேன்பெருக்கையும் நீர்ப்பெருக்கையும் வழியும்படி பெருகவிடுதலால் கண்ணீர்சொரிவனவாகத் தோன்றப்பெற்ற, கங்குல் - அந்த இரவிலே,—மானமும் - (சீதையையிழந்ததனாலாகிய) அவமானமும், சினமும் - (இராவணன்மேலுண்டான) கோபமும், தாதை மரணமும்-சடாயுவின்மரணத்தாலாகிய சிந்தையும், துயரும் - (கீழ்க்கூறியகாரணங்களால் உண்டான) மனத்துயரமும், ஞானமும் - (இவற்றைஅடக்கவேண்டுமென்ற) நல்லறிவும், தம்முள் - தமக்குள்ளே, மலை என - மலைகள்போர்செய்தாற்போல, மைந்தர் சிந்தை - இராஜகுமாரர்களாகிய இராமலக்குமணர்களுடைய மனத்திலே, நலிந்த - ஒன்றோடொன்று தாக்கி வருத்தின ; (எ - று.)

கானமும் மலையுமெல்லாம் தெருமரலுற்றுக் கண்ணினீர்உகுப்பன போலத் தேன்அருவிஉகச்சிந்துங் கங்கு லென்க. மானம், சினம், தாதைமரணம், துயர் இவை மனத்தில்தோன்றுமளவில் தத்துவஞானம் சிறிதுதோன்றி இவற்றை ஒழிக்கத்தொடங்க, மீண்டும் இவை தலையெடுத்து அந்தஞானத்தை அகற்ற, இங்ஙனம் மாறிமாறி மனந் தடுமாற்றமுற்றது என்பது, பின்னிரண்டடியின்கருத்து. முன்னிரண்டுஅடி - தற்குறிப்பேற்றவணி. காடுகள், மலர்களினின்றும் கூண்டுகளினின்றும் தேனைச் சொரியும். மலைகள், நீரருவியைச் சொரிவன. பி-ம்:—[1]தேனுதகமலமானைத் தேடிடுந்திறத்தோர்க்கண்டு. [2]மலர்களெல்லாம். [3]காலே. [4]மலைந்தன, மலிந்தன. (௧௦௩௮)

௩. மெய்யுற [1]வுணர்வு செல்லா [2]வறிவினை வினையி [3]னூக்கும்
பொய்யுறு பிறவி போலப் போக்கரும் பொங்கு கங்கு
னெய்யுறு நெருப்பின் [4]வீங்கி நிமிர்தர வுயிர்ப்பு நீளக்
கையற வுறுகின் றாராற் காணலாங் கரையிற் [5]றன்றே.

(இ - ள்.) மெய் உற உணர்வு செல்லா அறிவினை - உண்மைபொருந்த அறியமாட்டாத [தத்துவஞானமில்லாத] (ஒருவனுடைய) புத்தியை, வினையில் நூக்கும் - தீவினைவழியிலே வலியச்செலுத்துகிற, பொய் உறு பிறவி போல-பொய்த்தன்மைகள்பொருந்தியபிறப்புப்போல, போக்கு அரு பொங்கு - நீக்கமுடியாது மேன்மேல்வளர்கின்ற, கங்குல் - அந்தஇரவிலே,—(இராமலக்ஷ்மணர்) உயிர்ப்பு - பெருமூச்சு, நெய் உறு நெருப்பின் வீங்கி நிமிர்தர - நெய்சொரியப்பெற்றநெருப்புப்போல (மிக்கஉஷ்ணங்கொண்டு) மிகவும் அதிகப்பட, நீள - நெடுமையாக, கையறவு உறுகின்றார் - செயலறுதலை [அளவிறந்தசோகத்தை] அடைகின்றவர்களானார்கள்; (அவர்களுற்ற கையறவு), காணல் ஆம் கரையிற்று அன்று - காணுதற்குஉரியமுடிவையுடையதன்று [கரைகாணவொண்ணாதது]; (எ - று.)—ஆல், அன்றே - அசைகள்.

தத்துவஞானமுடையோர்க்கன்றி மற்றையோர்க்கு விடாதுவருகிற பிறப்பு நீக்கமுடியாதவாறுபோல, மனவுறுதியில்லாது வருந்துகிற இவர்க்

கும் சோகம் நீக்கமுடியாதிருந்தது. மையறவு - மூர்ச்சையுமாம்: செயலற் றிருத்தல், தொழிற்பெயர். வினையின் ஊக்கும் எனப் பிரித்துரைப்பினுமாம். சாரமற்றதாயிருந்தும் சாரமுடையதுபோலத் தோன்றி மயக்குதலின், 'பொய்யுறு பிறவி' எனப்பட்டது. கங்குல் நெய்யுறு நெருப்பின் வீங்கி நிமிர்தர என்றுஎடுத்து, இருள் நெய்சொரிந்த நெருப்புப்போல மேன்மேல் வளர்ந்துவருத்த என்று உரைப்பாரு முளர். காணலாங்கரையிற்றன்று என் பதற்குக் கங்குலை எழுவாயாகக்கொள்ளின், இணைபிரிந்தவர்களுக்கு விரக வேதனையால் இரவுநீட்டித்துத்தோன்றிவருத்து மாதலால்,சீதையைப்பிரிந்த இராமனுக்கு இரவு எல்லைகாணமுடியாததாக, இராமன் படும்வருத்தத்தைக் காணுதலால்,இலக்குமணனுக்கும் அவ்விரவு அவ்வாறாயிற்று என்க. பி-ம்: — [1]உணர்தல், அறிவு. [2]அறிவினன். [3]ஊக்குப். [4]மானநிமிர்தர. [5]அன்றே. ()

சு.—இராமபிரான் அவ்விரவுமுழுவதுஞ் சிறிதுந் துயில்கொள்ளாமை.

யாமது தெரித றேற்றேம் மின்னகைச் சனகி யென்னுங்
காமரு திருவை நீத்தோ முகமதி காண்கி லாதோ
தேமரு தெரியல் வீரன் கண்ணெனத் தெரிந்த செய்ய
தாமரை கங்குற் போதுங் [1]குவிந்திலாத் தன்மை யென்னே.

(இ - ள்.) தேன் மரு தெரியல் வீரன் கண் என தெரிந்த - தேன் பொருந்திய மலர்மாலையை யணிந்த வீரனாகிய இராமபிரானது கண்களென்று சொல்லப்பட்ட, செய்ய தாமரை - செந்தாமரைமலர்கள், கங்குல் போதும் - (குவியவேண்டிய) இராப்பொழுதிலும், குவிந்திலா தன்மை - குவியாதிருந் தமை,—இன் நகை சனகி என்னும் காமரு திருவை நீத்தோ-இனிய புன் சிரிப்பையுடைய சீதையென்னப்பட்ட அழகியஇலக்குமியை இழந்ததனு லோ? முகம் மதி காண்கிலாதோ - (அவளது) முகமாகிய சந்திரனைக்காணுத தனாலோ? என்னே - யாதுகாரணத்தாலோ? யாம் அது தெரிதல் தேற்றேம் - நாம் அக்காரணத்தை (இன்னதென்று) அறியமாட்டோம்; (எ - று.)

இது, கவிக்கூற்று. திருவை [செல்வத்தை] இழந்தவன் இரவிற் கண் மூடியுறங்காமைபோல, திருவை [சீதையை] இழந்த இராமனும் அவ்விர விற் கண்மூடித்தூங்கவில்லை; சந்திரனைக் கண்டு குவியுந்தன்மையுள்ள தாம ரை அதனைக்காணுவிடத்துக் குவியாதாதலால், இராமனது கண்களாகிய தாமரைகளும் சீதையின்முகமாகியசந்திரனைக் காணப்பெறாமையாற் குவிய வில்லையென்க. 'கண்ணெனத்தெரிந்த செய்யதாமரை' என்றஉருவகத்தில் 'எனத்தெரிந்த' என்ற சொல்லாற்றலால் கண்ணெனவே கொண்டு அது மூடாததற்கு 'திருவை நீத்தோ' என்றும், தாமரையென்ற உருவகத்திற்கு ஏற்ப அது குவியாததற்கு 'மதிகாண்கிலாதோ' என்றும் காரணங் கூறின ரென்க: காரணம் துணிந்து சொல்லக்கூடாமையால் யாமது தெரிதறேற் றேம்' என்றது. இனி, திருவில்லாதபொழுது பொலிவிழந்து குவிதலும், சந்திரனில்லாத இரவிலும் சிறுபான்மை குவிதலும் தாமரைக்கு இயல்பா

யிருக்க, இது அதற்கு மாறாயிருத்தல்பற்றி, 'யாமதுதெரிதல்தேற்றாம்' என்றாரென்பாருமுளர். இவ்வாறன்றி ஒருமனைக்கு உரியளாய் அதனுள் தனியே வாழ்ந்திருந்தவள் திடீரென்று அம்மனையை விட்டு அகன்றால், அம்மனை இரவிலுங் கதவடைக்கப்படாமல் திறந்தபடியே வாளாகிடத்தல் இயல்பாதலால், அத்தன்மையை இங்கே கொண்டு, செந்தாமரைமலர்க்கு உரியளாய் அதில்வாழுந் திருமகளாகிய சீதை நீங்கியதனால் அத்தாமரைமலர் இரவிலுங் குவியாதுகிடந்ததோ என்று சங்கித்துக் கற்பனைகூறினரென்றலுமுண்டு. இராமனது திருக்கண்ணுக்குத் திருமகள்வாழுஞ் செந்தாமரையை உவமையெடுத்துக்கூறியதனால், அப்பெருமான் பிராட்டியைத் தனது கண்ணினுள்வாழுங் கருமணியாகக் கொண்டு மிகப்பாராட்டி வெகுஅருமையாகப் போற்றிவந்தனனென்பது விளங்கும். ஓகாரங்கள் - ஐயப்பொருளன. உம்மை-சிறப்பும்மை. **உருவகவணியும் ஐயவணியும்** விரவியன. **பி-ம்:—** [1]குவியலாத். (கலசல)

## ரு.—இதுவும்அது.

பெண்ணியற் றீப மன்ன பேரெழி லாட்டி மாட்டு
நண்ணிய பிரிவு செய்த [1]நவையிலா நவையி னுள்ளத்
தெண்ணிய தறித றேற்றா [2]மிமைத்தில விராம னென்னும்
புண்ணியன் கண்ணும் வன்றோட் டம்பிகண் போன்ற வன்றே.

(இ - ள்.) பெண் இயல் தீபம் அன்ன - பெண்தன்மைபெற்றதொரு விளக்கைப் போன்ற, பேர் எழிலாட்டி மாட்டு-மிக்கஅழகையுடையவளான சீதையின் விஷயமாக, நண்ணிய - பொருந்திய, பிரிவு—, செய்த-(தனக்கு) உண்டாக்கிய, நவை இலா நவையின் - இகழ்ச்சியில்லாத பெருங்குற்றத்தினால், (இராமன்), உள்ளத்து எண்ணியது-(தன் மனத்தில் நினைத்ததை,அறிதல் தேற்றாம் - (இன்னதென்று யாம்) அறியோம்: இராமன் என்னும் புண்ணியன் கண்ணும் - நல்வினைவடிவாகிய அவ்விராமனது கண்களும், இமைத்தில-மூடியுறங்காதனவாய், வல் தோள் தம்பி கண் போன்ற - வலியதோள்களையுடைய (அவனது) தம்பியாகிய இலக்குமணனது கண்களை யொத்திருந்தன; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

வனஞ்சென்றதுமுதல் மீளுமளவும் பதினான்குவருடகாலம் இராமனையும் சீதையையும் துன்பமின்றிக் காப்பதற்காக இலக்குமணன் இரவிலும் கண்மூடாமலிருந்தமைபற்றி, அவனது கண்கள், விரகவேதனையால் துயிலற்றிருந்த இராமனது கண்களுக்கு உவமையாயின வென்க. "அல்லையாண்டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச, வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன், கல்லையாண்டுயர்ந்த தோளாய் கண்கணீர்சொரியக் கங்கு, லெல்லை காண்பளவு நின்றா னிமைத்தில னயன மென்றான்" என்ற குகப்படலத்துச் செய்யுளும், "மாலைவாய் நியமஞ்செய்து மரபுளியியற்றி வைகல், வேலைவாயமிர்தன்னாளும் வீரனும் விரித்தநாணல், மாலைவாய்ப் பாரின்பாயல் வைகினன் வரிவிலேந்திக், காலைவாயளவுந்தம்பி யிமைப்பிலன்

காத்துநின்றான்'' என்ற கங்கைப்படலத்துச்செய்யுளும் ஈண்டுக் காண்டற்கு உரியன. மிக்கஅழகையுடைய சீதைக்கு உலகிலுள்ளபொருளொன்றும் ஒப்பாகாதாதலால், அவ்வழகுமிகுதியை விளக்க, 'பெண்தன்மைகொண்டதொரு விளக்கு'' என இல்பொருளுவமை கூறினர். நவையென்றது - சீதையைப் பிரிந்த வருத்தம். தான் காப்பாற்றவேண்டிய தருமபத்தினியைப் பிரிந்ததனால் வருந்துவது நியாயமேயென்பதை விளக்க, 'நவையிலா' என்ற அடைமொழி அதற்குக்கொடுக்கப்பட்டது. கண்துயிலாமைக்குக் காரணம் உள்ளத்திற்கொண்ட சிந்தனையென்பதை அறிவோமாயினும், அப்பெருமான் அப்பொழுது சிந்தித்தவற்றையெல்லாம் இன்னவென்று அறியோமென்பார், 'உள்ளத்து எண்ணியது அறிதல்தேற்றாம்' என்றார். எழிலாட்டி - எழிலை ஆள்பவள். பி - ம்:—[1]நவையினரவங்கொல்சிந்தை, நவையினரவர்கள் சிந்தை. [2]இமைப்பில. (கoசக)

### கூ.—சந்தி ரோதயம்.

வண்டுளர் கோதைச் சீதை வாண்முகம் [1]பொலிய வானிற்
கண்டனெ [2]னென்று வீரற் [3]காங்கொரு காதல் காட்டத்
தண்டமிழ்த் தென்ற லென்னுங் கோளராத் [4]தவழுஞ் சாரல்
விண்டலம் [5]விளக்குஞ் செவ்வி வெண்மதி விரிந்த தன்றே.

(இ - ள்.) 'வண்டு உளர் கோதை சீதை-வண்டுகள் மொய்த்துஒலிக்கிற பூமாலையை யணிந்த சீதையினது, வாள் முகம் - ஒளிபொருந்திய முகத்தை, வானில் - ஆகாயத்தில், பொலிய - விளங்க, கண்டனென் - பார்த்தேன்,' என்று—, வீரற்கு ஒரு காதல் காட்ட - இராமபிரானுக்கு ஒரு ஆசையை உண்டாக்கும்படி—; தண் தமிழ் தென்றல் என்னும் கோள் அரா தவழும் சாரல் - குளிர்ந்தஇனிமையையுடைய தென்றலென்னப்பட்ட கொல்லுந்தன்மையுள்ள பாம்பு தவழப்பெற்ற மலைப்பக்கத்திலே, விண் தலம் விளக்கும் செவ்வி வெள் மதி - ஆகாயதலத்தை விளங்கச்செய்யவல்ல அழகிய வெண்மையான சந்திரன், ஆங்கு-(இராமன்வருந்தும்) அச்சமயத்தில், விரிந்தது-உதித்துஒளி வீசி விளங்கிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

இனிச் சீதையைக் காணமாட்டோமென்று ஆசையொழிந்திருந்த இராமபிரானுக்கு அவளதுமுகத்தைக்கண்டோமென்று ஓராசையுண்டாம்படி சந்திரன் உதித்தனனென்க. இங்கு **மயக்கவணி** தொனித்தல் காண்க. பிரிந்தவரை வருத்துகிற காமோத்தீபகப்பொருள்களுள் தென்றலும் ஒன்றாதலால், அதனைக் கோளராவாக உருவகப்படுத்தினர். தமிழ்என்பது - இனிமையென்னும் பொருளதாதலை, ''தமிழ்தழியசாயலவர்'' என்னுஞ் சிந்தாமணியாலும் உணர்க. சாரலில் வெண்மதி விரிந்தது எனவே, மலையின் உயர்ச்சி விளங்கும். வண்டு உளர்கோதைச்சீதை - இயற்கைநறுமணத்தாலும் சூடியமலர்களினாலாகிய செயற்கைநறுமணத்தாலும் வண்டுகள்மொய்த்து ஆரவாரிக்கப்பெற்ற கூந்தலையுடைய சீதை யெனினுமாம். தமிழ்த் தென்றல் - தமிழ்ப்

பாஷைபோலினிய தென்றல்; தமிழ்நாட்டிலிருந்துவருகிற தென்றல் எனவுமாம். பி - ம்:—[1]போல. [2]என்ன. [3]ஆண்டு. [4]தழுவும். [5]விளங்கும். (கOசஉ)

எ.—நிலவு இராமனை வருத்துதல்.

களியுடை யனங்கக் கள்வன் கரந்துறை கங்குற் காலம்
வெளிபடுத் துலக [1]மெங்கும் விளக்கிய நிலவின் வெள்ள
நளியிருட் பிழம்பென் றீண்டு நஞ்சொடு கலந்த நாகத்
துளையெயிற் [2]றான்ற லுற்ற வாலெனச் சுட்ட தன்றே.

(இ - ள்.) களி உடை அனங்கன் கள்வன் கரந்து உறை கங்குல் காலம் - செருக்கையுடைய மன்மதனாகிய திருடன் ஒளித்துவசிக்கிற அவ்விராப்பொழுதிலே, உலகம் எங்கும் வெளிபடுத்து விளக்கிய நிலவின் வெள்ளம் - உலகம் முழுவதையும் வெளிப்பட்டுவிளங்கச்செய்த நிலாவின் மிகுதியானது,—நளி இருள் பிழம்பு என்ற ஈண்டு நஞ்சொடு கலந்த - பெரிய இருட்கூட்டமென்னப்பட்ட நெருங்கிய விஷத்துடன் சேர்ந்த, நாகம் துளை எயிறு - பாம்பினது துளைபொருந்திய விஷப்பல்லில், ஊன்றல் உற்ற-உள்ளிருத்தலைப் பொருந்திய, ஆல் என-விஷம்போல, சுட்டது - (இராமனை) மிக வருத்தியது.

சகலலோககர்த்தாவாகிய இராமபிரானையே வருத்துஞ் சமயம் வாய்த்ததனால், மன்மதன் செருக்குடையவனாயினான். மன்மதனைக்குறிக்கும் 'மதநன்' என்ற வடமொழிப்பெயர்க்குக் களிப்புச்செய்பவனென்று பொருளாதலால், அதுபற்றி 'களியுடையனங்கன்' என்றாருமாம். அநங்கன் - அங்கம் [சரீரம்] இல்லாதவன். அவனைக் கள்வனாக உருவகப்படுத்தியது, தான் கட்புலனாகாது மறைந்திருந்து பிரிந்தாரை வருத்துதலால். மிக்க நிலாவானது இருளில் முழுகிக்கிடந்த உலகத்தை அதினின்று நீக்கி விளக்கியது என்பது, இரண்டாமடியின் கருத்து. பாம்பு - சந்திரனுக்கும், பாம்பின்பற்கள் - நிலவின் வெள்ளத்திற்கும், நஞ்சு - இருட்பிழம்பிற்கும் உவமை. நளி - பெருமை; உரிச்சொல். என்றீண்டு - தொகுத்தல். [2]ஊறலுற்றவாலென என்ற பாடத்திற்கு - துளை எயிறு-தொளையையுடைய நச்சுப்பற்களினின்று, ஊறல் உற்ற-சுரத்தல்பொருந்தின, ஆல் என-விஷம்போல என்க: ஆல் - ஆலம் என்பதன் விகாரம். பி-ம்:—[1]எல்லாம். [2]ஊன்றலுற்றதாமென. (கOசங)

அ.—இதுமுதற் பதினேழுகவிகள் - இராமன்சீதையை நினைத்து வருந்துதலைத் தெரிவிக்கும்.

இடம்படு [1]மானத் துன்ப [2]மிருடர வெண்ணிற் றீர்ந்தான்
விடம்பரந் தனைய தாய வெண்ணிலா வெதுப்ப வீரன்
படம்பரந் தனைய வல்குற் பால்பரந் தனைய [3]வின்சொற்
றடம்[4]படு கண்ணி னுடன் றனிமையை நினைய லுற்றான்.

(இ - ள்.) வீரன்-இராமபிரான்,—விடம் பரந்து அனையது ஆய வெள்நிலா வெதுப்ப-விஷம்பரவியதுபோன்றதாகிய வெள்ளியநிலாவானது வருத்தவும், இடம் படு மானம் துன்பம் இருள் தர - (இராவணன் சீதையைக் கவர்ந்ததனாலாகிய) பெரிய அவமானத்தினால் உண்டான துன்பம் அறிவைக்

கெடுக்கவும், எண்ணின் தீர்ந்தான் - பிறஎண்ணங்களினின்று ஒழிந்தவனாகி,— படம் பரந்து அனைய அல்குல் - பாம்பின்படம்விரிந்தாற்போன்ற அல்குலையும், பால் பரந்து அனைய இன் சொல் - பாலின் இனிமைமிகுந்தாற்போன்ற இனியசொற்களையும், தட படு கண்ணினாள் தன் - நீட்சிபொருந்திய கண்களையு முடையவளாகிய சீதையினது, தனிமையை-(தன்னைப்பிரிந்து) தனிப்பட்டதன்மையைப்பற்றி, நினையலுற்றான் - நினைப்பவனானான்; (எ - று.)

மனையாளை மாற்றான்கொண்டபேரவமானத்துன்பத்தினா லுண்டான அறிவுமயக்கத்தை 'இருள்' என்றார். பால் - அதன் இனிமைக்கு ஆகுபெயர். 'விடம்பரந்தனையதாயவெண்ணிலா' என்றது, மிகவருத்தந் தருங் கொடுமை பற்றி; நிறம்பற்றியன்று. பி - ம்:— [1]மானம். [2]இரண்டும்வந்துற்றபோது. [3]தீஞ்சொற். [4]பெருங். (கഠசச)

வேறு.

கூ. மடித்த வாயன் வயங்கு முயிர்ப்பினன்
றுடித்து வீங்கி யொடுங்குறு தோளினன்
பொடித்த தண்டளிர்ப் பூவொடு மால்கரி
யொடித்த கொம்பனை யாடிறத் துன்னுவான்.

(இ - ள்.) (இராமபிரான்),—மடித்த வாயன்-(வருத்தத்தினாலும் கோபத்தினாலும்) மடித்த உதட்டையுடையவனும், வயங்கும் உயிர்ப்பினன்-வெளிவிளங்குகிற பெருமூச்சையுடையவனும், துடித்து வீங்கி ஒடுங்குறு தோளினன் - (மனச்சஞ்சலத்தால்) துடித்து (ப் பகைவனையழிக்கவேண்டுமென்ற மனக்கிளர்ச்சியால்) பூரித்து (மனவுறுதியழிந்தமையால்) தளர்ச்சியடைகிற தோள்களையுடையவனுமாகி,—மால் கரி ஒடித்த - பெரிய யானையினால் ஒடிக்கப்பட்ட, பொடித்த தண் தளிர் பூவொடு கொம்பு அனையாள் திறத்து-வெளித்தோன்றிய குளிர்ந்த தளிரோடும் பூக்களோடுங் கூடிய கொம்பை யொத்தவளாகிய அச்சீதையின் விஷயமாக, உன்னுவான் - நினைப்பவனானான்;(எ-று.)

மால்கரி - இராவணனுக்கும், கொம்பு - சீதைக்கும், தளிரும் பூவும் - அவளது மேனிநிறத்துக்கும் அவயவங்களுக்கும் உவமை.

இதுமுதற் பத்தொன்பது கவிகள் - மாரீசன்வதைப்படலத்தின் உசரு-ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (கഠசரு)

கഠ. [1]வாங்கு வில்லன் வரும்வரு மென்றிரு
பாங்கு நீணெறி [2]பார்த்தன ளோவெனும்
வீங்கும் வேலை விரிதிரை யாமென
வோங்கி யோங்கி யொடுங்கு முயிர்ப்பினான்.

(இ - ள்.) (இராமபிரான்),— வேலை வீங்கும் விரி திரை ஆம் என - கடலில் மிகுகின்ற பரந்த அலைகள்போல, ஓங்கி ஓங்கி ஒடுங்கும் - உயர்ந்து உயர்ந்து அடங்குகிற, உயிர்ப்பினான் - பெருமூச்சையுடையவனாகி,—வாங்கு வில்லன் வரும் வரும் என்று இரு பாங்கும் நீள் நெறி பார்த்தனளோ எனும்-

(இராவணன்கையில் அகப்பட்டபோது சீதை) வளைத்த வில்லையுடையவனை (நம்கணவன்) வருவான்வருவானென்று எண்ணி இரண்டுபக்கங்களிலுமுள்ள நீண்டவழியைப் பார்த்தாளோ?' என்று சிந்திப்பான்; (எ - று.)

வரும்வரும்என்ற அடுக்கு - தன்னைமீட்பதற்கு இராமன்வருவது நிச்சயமென்ற கருத்தை விளக்கிற்று. ஓங்கி ஓங்கி - அடுக்கு, இடைவிடாமைப் பொருளது. பார்த்தனளோ, ஓகாரம் - ஐயத்தோடு இரங்குதற் பொருளது. பெரியகடலில் கிளர்ந்துகிளர்ந்து அடங்கும் அலை, கரிய இராமனிடத்தில் உயர்ந்துஉயர்ந்து தோன்றியொடுங்கும் மூச்சுக்கு உவமையாயிற்று. பி-ம்:— [1]வாங்கும். [2]பார்த்தனையோ. (கoசுசு)

கக. [1]என்னி னைந்தில ளென்பது [2]சாலுமோ
மின்னி னைந்த [3]விலங்கு மெயிற்றின
னின்னி லென்று [4]நெருங்கிய போ[5]தவ
ளென்னி னைந்தன ளோவென வெண்ணுமால்.

(இ - ள்.) 'மின் நினைந்த விலங்கும் எயிற்றினன் - மின்னல்போன்ற விலகியுள்ள கோரதந்தங்களையுடையஇராவணன், நில்நில் என்று நெருங்கிய போது - (சீதையை நோக்கி) நில்நில்என்றுசொல்லிக்கொண்டு கிட்டியகாலத்தில், அவள் என் நினைந்திலள் என்பது சாலுமோ-அச்சீதை என்னைநினைக்கவில்லை யென்றுசொல்லுவது (அவளதுகுணத்துக்குத்) தகுதியாயிருக்குமோ? [இராது என்றபடி]; (அப்படிஅவள்நினைத்து எதிர்பார்த்தும் நான் அவளைக் கிட்டாமையால்), என் நினைந்தனளோ - (என்விஷயத்தைப்பற்றி) யாது நினைந்தனளோ?' என எண்ணும்-என்றுநினைப்பான், (இராமன்); (எ - று.)

கீழ்க்கவியில் தன்னைச்சீதை எதிர்நோக்கியிருப்பாளென்று கருதியதை இக்கவியின்முதலடியால் அவ்வாறு நினையாமலிருப்பது அவள்பெருமைக்குத் தகுதியன்றென்று கருதி வற்புறுத்தினன். 'என் நினைந்தனளோ' என்றது-உதவவேண்டியகாலத்திலும் தான் வந்துஉதவாமையால், மானுருக்கொண்டு வந்த அரக்கனால் இராமனுக்கு யாதுதீமைநேர்ந்ததோ வென்று எண்ணிச் சீதை வருந்தியிருப்பாளென்பதை விளக்கும். [1]தன்னினைந்திலள் என்றபாடத்துக்கு-தன் நினைந்திலள் என்பது சாலுமோ - (இராவணன்சமீபித்தபோது அவள்) தனது நிறையொழுக்கத்தைக் கருதினளில்லை யென்பது தகுதியுடைத்தோ என்று பொருள்; அவள் கற்புநிலைகுலைந்திருப்ப ளென்று எண்ணுவது தகாது என்பது கருத்து: இனி,அப்பாடத்துக்கு, தன்னில் நைந்திலள் என்று பதம்பிரித்து-தன்னிலேதான் வருந்தினளில்லை யென்று கருதுதல் அடாது என்று உரைப்பாருமுளர். நினைந்த - உவமவுருபு. என் நினைந்தனளோ என்பது - என்னை நினைத்தாளோ என்றும் பொருள்படும். ஆல் - ஈற்றசை. பி - ம்:— [2]சாலுமே. [3]எயிற்றின்விலங்கனன். [4]நெருக்கிய. [5]அவண். (கoசுஎ)

கஉ. நஞ்சு காலு நகைநெடு நாகத்தின்
வஞ்ச வாயின் மதியென மட்குவாள்

வெஞ்சி னஞ்செ யரக்கர் தம் வெம்மையை
யஞ்சி னன்கொலென் றையுறு மாலென்பான்.

(இ - ள்.) 'நஞ்சு காலும் நகை நெடு நாகத்தின் வஞ்சம் வாயில் மதி யென மட்குவாள் - விஷத்தைக் கக்குகின்ற பற்களையுடைய (இராகுவென்னும்) பெரிய பாம்பினது கொடுமையுடைய வாயில் (அகப்பட்ட) சந்திரன் போல ஒளிமழுங்குபவளாகிய சீதை,— (நான் வாராததனால்), வெம் சினம் செய் அரக்கர்தம் வெம்மையை அஞ்சினன் கொல் என்று ஐயுறும்-கொடிய கோபத்தையுடைய இராக்கதர்களது கொடுமைக்கு (இராமன்) பயப்பட்டானோ?" என்று சந்தேகப்படுவாள்,' என்பான் - என்றுசிந்திப்பான், (இராமன்).

இராகுவின்வாய்ப்பட்டமதி, இராவணன்கைப்பட்ட சீதைக்கு உவமை. ஐயுறும் - ஐயமுறும்; தொகுத்தல்: செய்யுமென் முற்று இங்கே பெண்பாலுக்கு வந்தது. கொல்- ஐயம். ஆல்-அசை: தேற்றமுமாம். (கoசஅ)

கந. பூண்ட மானமும் போக்கருங் காதலுந்
தூண்ட நின்றிடை தோமுறு மாருயிர்
மீண்டு மீண்டு வெதுப்ப வெதும்பினன்
வேண்டு மோவெனக் கின்னமும் வில்லென்பான்.

(இ - ள்.) பூண்ட மானமும் - (தனக்கு) நேரிட்ட அவமானமும், போக்கு அரு காதலும் - நீக்கமுடியாத ஆசையும், தூண்ட - தூண்டுதலினால், இடை நின்று - நடுவிலே அழியாதுநின்று, தோம் உறும்-வருத்தமடைகிற, அரு உயிர் - அரியஉயிரை, மீண்டு மீண்டு வெதுப்ப - (அவை) மாறி மாறி வருத்துவதனால், வெதும்பினன்-மனம்வருந்தினவனாகி, (இராமன்), 'எனக்கு இன்னமும் வில் வேண்டுமோ—?' என்பான் - என்றுசொல்வான்; (எ - று.)

சீதையை யிழந்த அவமானம் ஒருபக்கத்திலும், மீண்டுங்கிடைப்பளோ வென்ற ஆசை மற்றொருபக்கத்திலுமாக மாறிமாறிவருத்த,இடையில்அகப்பட்டுக்கொண்டு போகவும்நிற்கவும் மாட்டாமல் தவிக்கும் உயிருடையவனாகி இராமன் ஒருசெயலுஞ்செய்யமுடியாமல், 'சமயத்திற்பயன்படாத இந்தவில் இனி இருந்து யாதுபயன்?' என வருந்திக்கூறினனென்க. சில எட்டுப்பிரதிகளில், முதலிரண்டடிகள் மாறிக்கிடக்கின்றன. (கoசகூ)

கச. வில்லை நோக்கி நகுமிக வீங்குதோட்
கல்லை நோக்கி நகுங்கடைக் கால்வருஞ்
சொல்லை நோக்கித் [1]துணுக்கெனுந் தொன்மறை
யெல்லை நோக்கினர் யாவரு நோக்குவான்.

(இ - ள்.) தொல் மறை எல்லை நோக்கினர் யாவரும் நோக்குவான் - பழமையானவேதத்தின்முடிவை [வேதாந்தத்தை] அறிந்தவர்களெல்லாராலும் கண்டறியப்படுபவனான இராமபிரான்,—வில்லை நோக்கி நகும் - (தன் கையிலுள்ள) வில்லைப்பார்த்து(ப் பயனற்றதே யென்று) சிரிப்பான்; மிக

வீங்கு தோள் கல்லை நோக்கி நகும் - மிகவும்பருத்துள்ள (தனது) தோள்களாகிய மலைகளைப் பார்த்து (வீணுக்குப்பருத்திருக்கின்றனவே யென்று) சிரிப்பான்; கடைக்கால் வரும் சொல்லை நோக்கி துணுக்கெனும் - (மனைவியைக் காவாதுஇழந்தனனே யென்று தனக்கு) இறுதிக் காலத்து நேரிடுகிற (உலகத்தார்கூறும்) பழிச்சொல்லைச் சிந்தித்துத் திடுக்கிடுவான்; (எ - று.)

வேதாந்திகளுக்கே விஷயமாகிற பரம்பொருளான இராமபிரானே இவ்வாறுவருந்தினுனென்று பிரிவின் கொடுமையை விளக்கியவாறு. நகை - இகழ்ச்சிபற்றியது. கல் - ஆகுபெயர். கடைக்கால்-பின்பு என்றபடி. பி - ம்:— [1]துணுக்குறும். (கώ௱)

கரு. கூதிர் வாடை வெங் கூற்றினை நோக்கினன்
வேத வேள்வி விதிமுறை மேவிய
சீதை யென்வயிற் றீர்ந்தன ளோவெனும்
போத கம்மெனப் பொம்மெ னுயிர்ப்பினான்.

(இ - ள்.) போதகம் என பொம்மென் உயிர்ப்பினான் - யானைபோலப் பொம்மென்றஒலியுடன் விடும் பெருமூச்சையுடையவனாய், கூதிர் வாடை வெம் கூற்றினை நோக்கினன் - குளிர்ந்த காற்றாகிய கொடிய யமனை நோக்கி, 'வேதம் விதி முறை வேள்வி மேவிய - வேதவிதிப்படி செய்த சடங்கினால் மணந்துகொண்ட, சீதை—, என்வயின்-என்னிடத்தினின்றும், தீர்ந்தனள்-நீங்கிவிட்டனள்: ஓ - அந்தோ!' எனும் - என்பான், (இராமன்); (எ - று.)

விரகவேதனையால் அறிவுமழுங்கிக் கிடந்த இராமன், பிரியாதார்க்குக் குளிர்ந்திருக்கவேண்டிய காற்றுக் கொடியயமன்போலக் காமோத்தீபகமாய்த் தன்னைவருத்தியதனால், சீதையின்பிரிவையுணர்ந்தா னென்க. ஓகாரம்-இரக்கம். போதகம்மென - விரித்தல். போதகம்-யானைக்கன்று; பருவப்பெயராகாமல் யானையென்றமாத்திரமாய் நின்றது. மூன்றமடிக்கு - சீதை என்னிடத்தினின்று நீங்கினளோ என்பான் எனினுமாம். பொம்மெனல்-ஒலிக்குறிப்பு.

கசு. நின்று பல்லுயிர் காத்தற்கு நேர்ந்தயா
னென்று ணைக்குல மங்கையொ ரேந்திழை
தன்[1]றுயர்க்குந் [2]தகவிலெ னாயினே
னன்று நன்றென் வலியென நாணுமால்.

(இ - ள்.) 'நின்று பல் உயிர் காத்தற்கு நேர்ந்த யான் - (முன்பு தந்தையின் வார்த்தைப்படி அரசனாய்) நின்று (உலகத்துப்) பலவுயிர்களையும் பாதுகாத்தற்கு உடன்பட்ட நான், ஓர் ஏந்து இழை என் துணை குலம் மங்கை தன் துயர்க்கும் தகவு இலென் ஆயினேன்-அணிந்த ஆபரணங்களையுடையவளாகிய எனக்குத் துணைவி [மனைவி]யான ஒரு குலஸ்திரீயினது துன்பத்தை நீக்குதற்கும் தகுதியற்றவனாய் விட்டேன்; என் வலி நன்று நன்று - எனது பலம் மிகநன்றாயிருந்தது!' என-என்று, நாணும்-நாணமடைவான், (இராமன்); (எ - று.)

ளான, பிரமன் சிவன் இவர்களுக்கும் மேற்பட்டவன் என்பது பொருள்.
**பி-ம்:**—[1]முரணிற்ற. [2]பரமேட்டி. (௧௧அ௫)

௬௯. நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள்
ளுன்செய்கை யன்னவைதான் சொன்ன வொழுக்கினவோ
வென்[1]செய்தேன் முன்ன [2]மறஞ்செய்கை யெய்தினார்
பின்[3]செல்வ தில்லாப் பெருஞ்செல்வ நீ[4]தந்தாய்.

(இ - ள்.) நீள் மறைகள் - அநந்தமான வேதங்கள், நின் செய்கை கண்டு நினைந்தனவோ - உனது செய்கைகளைக் கண்டு நினைத்துச்செய்யப்பட்டனவோ? (அன்றி), உன் செய்கை அன்னவை தான் சொன்ன ஒழுக்கினவோ - உனது செய்கைகள்தாம் அவ்வேதங்கள் கூறியபடியே உள்ளனவோ? நீ - அத்தன்மையுடையநீ, மறம் செய்கை எய்தினார் பின் செல்வது இல்லா பெரு செல்வம் - தீவினைசெய்தவர்கள் பின்பு அடையமுடியாத பெருஞ் சிறப்பை, தந்தாய் - (எனக்குக்) கொடுத்தாய்; முன்னம் என் செய்தேன் - (நீ இவ்வாறு எனக்குக் கொடுக்கும்படி) முற்பிறப்பில் நான் என்னநல்வினை செய்துள்ளேன்? [ஒன்றுமில்லையே யென்றபடி]; (எ - று.)

நான் ஓர்உபாயமும் செய்யாதிருக்கையிலும் நீ நிர்ஹேதுகமாக எனக்கு நற்கதியளித்தாய் என்றுகூறிப் புகழ்ந்தா னென்பது, பின்னிரண்டடியின் கருத்து. 'மறஞ்செய்கையெய்தினார் பின்செல்வதில்லாப் பெருஞ்செல்வம்' என்றது - இங்கே, சுவர்க்கவின்பம். சருவேசுவரனுடைய செயல்களும் வேதத்தின் பொருளும் ஒத்துள்ளபடியால், இவனது செயல்களைநோக்கியே வேதங்கள் செய்யப்பட்டனவோ? அன்றி, வேதங்களிற்கூறியபடி இவன் செய்கிறானோ? என்று விகற்பிக்க இடமுண்டாயிற்று. பின்னிரண்டடிகள் முன்னிரண்டடிகளாகவும், முன்னிரண்டடிகள் பின்னிரண்டடிகளாகவும் பின்வரும் பாடபேதத்தோடு காணப்படுகின்றன: **பி-ம்:**—[1]செய்தனை. [2]இச் செய்கையெய்தினாய். [3]செய்வது. [4]பெற்றாய். இச்செய்யுள் சிலபிரதிகளில் ௬௩ - ஆஞ்செய்யுளின்பின் உள்ளது. (௧௧அ௬)

௭௦. மாயப் பிறவி மயனீக்கி [1]மாசிலாக்
காயத்தை நல்கித் துயரின் கரையேற்றிப்
[2]பேயொத்தேன் பேதைப் பிணக்கறுத்த [3]வெம்பெருமா
ளுயொத்தே னென்ன நலனிழைத்தே னென்றான்.

(இ - ள்.) பேய் ஒத்தேன் - பேய்போன்றஎனது, மாயம் பிறவி மயல் - வஞ்சனைக்கு இடமான (சாபத்தால்நேர்ந்த) இராக்கதப் பிறப்பினா லுண்டாகிய குற்றங்களை, நீக்கி - ஒழித்து, மாசு இலா காயத்தை நல்கி - குற்றமற்ற திவ்யசரீரத்தை (எனக்கு)க் கொடுத்து, துயரின் கரை எற்றி - (சாபத்தால் நேர்ந்த) துன்பமாகிய கடலினின்று (என்னை) உய்வித்து, பேதை பிணக்கு அறுத்த - அறியாமையாற்கொண்ட (எனது) பகைமையை யொழித்தருளிய, எம்பெருமான் - எமதுதலைவனே! நாய் ஒத்தேன் நான் - நாய்போல் மிக

இழிந்தவனான நான், என்ன நலன் இழைத்தேன்-(இவ்வாறு நீ நிர்ஹேதுகமாகக் கருணைசெய்தற்கு) என்னநல்லுபாயம்செய்தேன்! என்றான்—;(எ-று.)

நான் யாதொருநல்லுபாயமுஞ்செய்யாமல் உன்னிடத்துப்பகைமையையே பாராட்டவும்,நீ அதனை மனத்திற்கொள்ளாது,எனதுசாபப்பிறப்பையொழித்து, திவ்வியசரீரத்தைத்தந்து, எனதுதுன்பங்களைநீக்கியருளியது என்ன நிர்ஹேதுககிருபையோ! என்று, முற்செய்யுளிற்கூறியதையே மறுபடி விவரித்துக்கூறினான். பி - ம்:—[1]மாசில்லா. [2]பேயொத்த. [3]எம்பெருமா, எம்பெருமாஅன். (ககஅஎ)

ருக.—ஆகாயத்தில் திவ்யசரீரத்தோடுநின்ற கவந்தனை இராமன் காணுதல்.

என்றாங் கினிதியம்பி யின்றறியக் கூறுவெனே
லொன்றாது தேவ ருறுதிக் கெனவுன்னத்
தன்றாயைக் கண்ணுற்ற கன்றனைய தன்மையனைப்
நின்றானைக் கண்டா னெறிநின்றார் நேர்நின்றான்.

(இ - ள்.) என்று ஆங்கு இனிது இயம்பி - (கவந்தன்) இவ்வாறு அப்போது இனிமையான துதிமொழிகளைக் கூறி, ‘இன்று-இப்பொழுது, அறிய கூறுவென் எல் - (இனிநடக்கவேண்டிய விஷயங்களைப்பற்றி)வெளிப்படையாகச் சொல்வேனானால், தேவர் உறுதிக்கு ஒன்றாது - தேவர்களது மனவுறுதிக்குப் பொருந்தாது’,என உன்ன-என்று நினைத்து, தன் தாயை கண்ணுற்ற கன்று அயனை தன்மையன் ஆய் நின்றானை-தனதுதாயைப்பார்த்து மகிழ்ச்சிகொண்ட கன்றுபோன்ற தன்மையுடையவனாய் (இராமனைப்பார்த்து மகிழ்ந்து) நின்ற கவந்தனை, நெறிநின்றார் நேர்நின்றான்-நல்லொழுக்கநெறியில்நடப்பவர்க்குப் பிரதியட்சமாகுந்தன்மையனான இராமபிரான், கண்டான்—; (எ - று.)

சீதையைக் கண்டுபிடிக்கும் வழி, அவளைமீட்கும்உபாயம் இவற்றை இராமலக்குமணர்களுக்கு வெளிப்படையாக நான் சொல்லிவிட்டால் உடனே இவர்கள் சென்று எளியவழியில் அவளை மீட்டிடுதல் கூடும்; அவ்வாறு மீட்டுவிட்டால், தேவர்கள்கருத்திற்கொண்டுள்ள ராக்ஷஸசங்காரமும், தாங்கள் அடிமை பூணுதலும் இல்லாமற்போய்விடு மென்றுநினைத்துக் கவந்தன் முழுதுங்கூறாமல் சிறிதேசொல்வானாய் நின்றான் என்பதாம். ‘நெறிநின்றார்நேர்நின்றான்’ என்றது, தத்துவஞானிகளுக்கே புலனாதுபவ னென்றவாறு.

ருஉ.—இராமன் இலக்குமணனுக்குக் கவந்தனைச் சுட்டிக் காட்ட, அவன் கவந்தனை நீ யாரென்று வினவல்.

பாரா [1]யிளையோனே [2]பட்டவனே வேறேயோர்
பேராளன் [3]றானே வொளிமேயோங்கு பெற்றியனாய்
[4]நேராத காயத்தி னிற்கின்றா னீயிவனை
யாரா யெனவ்வவனை யார்கொலோ நீயென்றான்.

(இ - ள்.) 'இளையோனே - தம்பியே! ஒளி ஓங்கும் பெற்றியன் ஆய் - ஒளிவிளங்குகிற தன்மையமைந்தவனாய், நேராத-எளிதிற்கிடைக்காத, காயத்தின்-சரீரத்தோடு, நிற்கின்றான் - நிற்கின்றவன், பட்டவனோ - (நம்மால்) இறந்துபட்டவனோ? வேறே ஓர் பேர்ஆளன் தானோ - வேறேஒரு பெருமை பெற்றவனோ? நீ—, இவனை—, பாராய் ஆராய் - பார்த்து ஆராய்வாயாக,' என - என்று (இராமன்) கூற,—(அவ்விலக்குமணனும்), அவனை-(ஆகாயத்தில்நிற்கின்ற) அன்னானை, நீ ஆர்கொல்ஓ - நீ யாவன்?' என்றான் - என்று வினாவினான்; (எ - று.)—எ, தான், கொல், ஓ - அசைகள். பி - ம்:—[1]இளையவனே. [2]பட்டவிவன். [3]தானாய். [4]நேராகாயத்தின்மிசை. [5]அவனும். ()

வே று.

ருஅ.—கவந்தன் தன்வரலாறுகூறுதல்.

சந்தப்[1]பூ ணலங்கல் வீர தனுவெனு நாமத் தேனோர்
கந்தர்ப்பன் சாபத் தாலிக் கடைப்படு பிறவி கண்டேன்
வந்துற்றீர் மலர்க்கை தீண்ட முன்னுடை [2]வடிவம் பெற்றே
னெந்தைக்கு மெந்தை [3]நீரே யிசைப்பது கேண்மி னென்றான்.

(இ - ள்.) சந்தம் பூண் அலங்கல் வீர-அழகிய ஆபரணங்களையும் மாலையையும் அணிந்த வீரனே! (நான்), தனு எனும் நாமத்தேன் ஓர் கந்தர்ப்பன்-தனுவென்றபெயரையுடைய ஒரு கந்தர்வனாவேன்; சாபத்தால் இ கடைப்படு பிறவி கண்டேன் - (ஸ்தூலசிரஸ் என்னும் முனிவனது) சாபத்தினால் இந்த இழிந்தஇராக்கதப்பிறப்பை யடைந்தேன்; வந்து உற்றீர் மலர் கை தீண்ட முன் உடை வடிவம் பெற்றேன் - இங்குவந்தடைந்த உங்களுடைய தாமரைமலர்போன்ற கைகள் தீண்டினமாத்திரத்தில் எனது முன்னைபவடிவத்தை அடைந்தேன்; எந்தைக்கும் எந்தை நீர் - எனதுதந்தைக்குந்தந்தைபோன்றவர்களாகிய நீங்கள், இசைப்பது - (நான்) சொல்வதை, கேண்மின்-கேளுங்கள், என்றான் - என்று (கவந்தன்) கூறினான்; (எ - று.)—எ - அசை.

தனது துன்பம் தீர்தற்கு இவர்கள் காரணமாயிருந்ததனால், இவர்களை 'எந்தைக்குமெந்தை நீர்' என்று புகழ்ந்தான். கந்தர்ப்பன் - வடமொழித்திரிபு. உற்றீர் - பெயர். பி-ம்:—[1]போர். [2]வடிவு. [3]நீர்யான்.

இதுமுதல் இக்காண்டம்முடியுமளவும் பதினைந்துகவிகள் - மாரீசன் வதைப்படலத்தின் கஅ - ஆங்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். ()

ருஎ.—இரண்டுகவிகள் - கவந்தன் இராமலட்சுமணரைநோக்கி 'உங்களுக்குத்துணை வேண்டும்' என்றலைத் தெரிவித்தும்.

கணையுலாஞ் சிலையி னீரைக் காக்குந [1]ரில்லையேனு
மிணையிலா டன்னை நாடற் [2]கேயன செய்தற் [3]கேற்கும்
புணையிலா தவற்கு வேலை போக்கரி தன்ன தேபோற்
றுணையிலா தவற்கு [4]மின்னா பகைப்புலந் தொலைத்து நீக்கல்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) கணை உலாம் சிலையினீரை காக்குநர் இல்லையெனும்-அம்புகளை மிகுதியாகத்தொடுத்தற்கு உரிய வில்லையேந்திய உங்களைப் பாதுகாக்க வல்லதுணைவர் (எவரும்) இல்லையேயானாலும்,—இணை இலாள் தன்னை - ஒப்பில்லாத சீதையை, நாடற்கு - தேடுதற்கு, ஏயன - பொருந்துந்தொழில்களை, செய்தற்கு—, ஏற்கும் - (துணைவரால்) இயலும்; புணை இலாதவற்கு வேலைபோக்கு அரிது-தெப்பமில்லாதவனுக்குக் கடலைக்கடந்து போதல் அரியது: அன்னதேபோல் - அதுபோலவே, துணை இலாதவற்கும் பகை புலம் தொலைத்து நீக்கல் இன்று-துணையில்லாத ஒருவனுக்கும் சத்துருபக்ஷத்தைத் தொலைத்தொழிப்பது முடியாது; (எ - று.)

ஆதலால், பகையைத் தனியே துணையின்றியொழிக்கவல்ல நீங்களும் துணை தேடிக்கொள்ளுதல் அவசியம் என்பது கருத்து. [3]ஏற்றும் என்பது பாடமாயின், அது புணைக்கு அடைமொழியாம். 'செய்தற்கு' என்பதற்கு முடிக்குஞ்சொல் வருவிக்கவேண்டும். பி-ம்:—[1]இன்மை. [2]ஏயின. [4]ஒண்ணு, ஒன்னூர், இன்றால். (கககக)

நுரு. பழிப்பறு நிலைமை யாண்மை பகர்வதென் பதும பீடத்
துழிப்பெருந் தகைமை சான்ற வந்தண னுயிர்த்த வெல்லா
மழிப்பதற் கொருவ னான வண்ணலு மறிதி ரன்றே
யொழிப்பருந் [1]திறலபூத கணத்தொடு முறையு முண்மை.

(இ - ள்.) பழிப்பு அறு நிலைமை ஆண்மை பகர்வது என் - குற்றமற்ற தன்மையையுடைய (சிவபிரானது) ஆண்தன்மையைப்பற்றிச் சொல்லவேண்டுவது யாது? [மிகப்பிரசித்தமான தன்றோ?] பதுமம் பீடத்து உழி பெரு தகைமை சான்ற அந்தணன் உயிர்த்த எல்லாம் அழிப்பதற்கு ஒருவன் ஆன அண்ணலும் - தாமரைமலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கின்ற மிக்கபெருமைபொருந்திய பிரமதேவன் படைத்த எல்லாப்பொருள்களையும் அழிக்க ஏற்பட்ட ஒப்பற்ற அந்தச்சிவபிரானும், ஒழிப்பு அரு திறல பூத கணத்தொடும் உறையும் உண்மை-நீக்கமுடியாத வலிமையையுடைய பூதகணங்களைத் துணைக்கொண்டு அவற்றுடன்கூடி வசிக்குந் தன்மையை, அறிதிர் அன்றே-(நீங்கள்) அறிவீர்களன்றோ? (எ - று.)

எத்துணைவல்லார்க்குந் துணைவர் இன்றியமையாதவரென்பதற்கு, பேராற்றலையுடைய சிவபிரான் பூதகணங்களைத் துணைக்கொண்டுள்ளமையைத் திருஷ்டாந்தமெடுத்துக்காட்டினான். திறல - குறிப்புப்பெயரெச்சம். பி-ம்:—[1]திறற்பல். (கககஉ)

நுகூ.—கவந்தன், சீதையைத்தேட நல்லுபாயஞ்சொல்லுதல்.

ஆயது செய்கை யென்ப தறத்துறை நெறியி னெண்ணித்
தீயவர்ச் சேர்க்கி லாது [1]செவ்வியோர்ச் சேர்த்துச் செய்த
றூயினு முயிர்க்கு நல்குஞ் சவரியைத் தலைப்பட் டன்னா
ளேயதோர் [2]நெறியி னெய்தி [3]யிரலையின் குன்ற மேறி.

இதுவும், வருங் கவியும் - குளகம்.

(இ - ள்.) ஆயது செய்கை என்பது - செய்யவேண்டியதான தொழில் இப்படிப்பட்ட தென்பதை, அறம் துறை நெறியின் எண்ணி-தருமமார்க்கத் தின்முறைப்படி ஆலோசித்து, தீயவர் சேர்க்கிலாது-கொடியவரைத் துணை யாகக்கொள்ளாமல், செவ்வியோர் சேர்த்து-நல்லோரைத் துணைக்கொண்டு, செய்தல்-செய்க; (அப்படிசெய்தற்காக), உயிர்க்கு தாயினும் நல்கும் சவரியை தலைப்பட்டு-எல்லாவுயிர்களுக்கும் தாயைப்பார்க்கிலுங் கருணைசெய்கிற சபரி யென்பாளைச் சந்தித்து, அன்னாள் ஏயது ஓர் நெறியின் எய்தி-அவள் ஏவுவ தாகிய ஒருவழியிலே சென்று, இரலையின் குன்றம் ஏறி - ருசியமூகபருவதத் தின்மேல் ஏறி,—(எ - று.)—இப்பாட்டில் 'ஏறி' என்பது, "தழுவி அமர்ந்து நாடுதல் விழுமிது" என அடுத்த கவியோடு முடியும்.

ருஶ்யமூகம் என்னும் வடமொழிப்பெயர்க்கு-கலைமான்கள் ஒலியாமல் வாழப்பெறும் மலை யென்று பொருள்; அப்பெயர்க்கு ஞாபகமாக அதில் 'ருஶ்யம்' என்னும் முதல்மொழியின் பொருளைமாத்திரம் எடுத்துக்கொண்டு, அம் மலையை 'இரலையின்குன்றம்' என்று குறித்தார்: இது, நாமைகதேசே நாமக் கிரகணத்தின் பாற்படும்: இரலை-கலைமான்; இன் - சாரியை. ஏயது - ஏவியது. செய்தல்-'தல்'விகுதிபெற்ற வியங்கோள். ஆயது செய்கை என்பது - செய்யவேண்டிய செய்கையாவது,......சேர்த்துச்செய்தலாம் என்றும் உரைக்கலாம்; செய்தல் - தொழிற்பெயர். சபரியின் வரலாறு, மேல் விளங்கும்.

பி-ம்:—[1]செவ்வியோர்ச் சேர்க்குஞ்செய்கை, செவ்வியோர்செய்கை தேர்ந்து. [2]நெறியையெய்தி. [3]இரலையங். (கநகூ)

ருஎ. கதிரவன் சிறுவ னான [1]கனகவா ளிறத்தி னானை
யெதிரெதிர் தழுவி நட்பி னினிதமர்ந் தவனி னீண்ட
வெதிர்பொருந் தோளி னாளை [2]நாடுதல் விழுமி தென்றா
னதிர்கழல் வீரர் தாமு மன்னதே [3]யமைவ தானார்.

(இ - ள்.) கதிரவன் சிறுவன் ஆன கனகம் வாள் நிறத்தினானை-சூரியனது மகனான பொன்போன்ற ஒளிபொருந்திய வடிவமுடைய சுக்கிரீவனை, எதிர் எதிர் தழுவி-(ஒருவருக்குஒருவர்) அளவளாவித் தழுவிக்கொண்டு, நட்பின் இனிது அமர்ந்து-(அவனுடன்) இனிமையாகச் சினேகஞ்செய்து, அவனின்-அவனுடையதுணையால், நீண்ட வெதிர் பொரு தோளினாளை நாடுதல்-நீண்ட மூங்கில் போன்ற (பருத்த) தோள்களையுடைய சீதையைத் தேடுதல், விழுமிது - சிறந்தது, என்றான் - என்று (கவந்தன்) கூறினான்; அதிர் கழல் வீரர்தாமும் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த வீரர்களான இராமலக்ஷ்மணர் களும், அன்னதே அமைவது ஆனார் - அப்படிச்செய்வதையே உடன்பட்டவ ரானார்கள்; (எ - று.)

சாபத்தாற் பெண்வடிவம்பெற்ற 'ருக்ஷரஜஸ்' என்னும் வானரராஜனது கழுத்தின் அழகைக் கண்டு காமுற்ற சூரியனுக்கு அப்பெண்குரங்கினிடம்

பிறந்தவன் சுக்கிரீவ னென்று உணர்க. பி-ம்:—[1]கண்கவர். [2]நாடுதிர் விரை வின். [3]அமையுமென்றார். (ககசுசு)

### ருஅ.—கவந்தன் செல்ல, இராமலட்சுமணர் அன்றிரவில் மதங்காச்சிரமம் அடைதல்.

[1]ஆனவன் றொழுது வாழ்த்தி [2]யந்தரத் தெழுந்து போனான்
[3]மானவக் குமரர் தாமு மத்திசை வழிக்கொண் டேகிக்
கானமு மலையு நீங்கிக் கங்குல்வந் [4]திறுத்த காலை
யானையி [5]னிரட்டை யென்ன மதங்கன திருக்கை சேர்ந்தார்.

(இ - ள்.) ஆனவன் - அவ்வாறான கவந்தன், தொழுது வாழ்த்தி-(இராமலக்ஷ்மணர்களை) வணங்கி வாழ்த்தி, அந்தரத்து எழுந்து போனான்-ஆகாயத்திற் கிளம்பிப் போய்விட்டான்; மானவர் குமரர் தாமும் - மநுவம்சத்திற்பிறந்த குமாரர்களான இராமலக்ஷ்மணர்களும், அ திசை வழி கொண்டு ஏகி-(கவந்தன் கூறிய) அத்திக்கின் வழியைப் பற்றிச் சென்று, கானமும் மலையும் நீங்கி-காடுகளையும் மலைகளையுங் கடந்து, கங்குல் வந்து இறுத்த காலை-இரவு வந்த பொழுது, யானையின் இரட்டை என்ன-இரண்டு ஆண்யானைகள் போன்று, மதங்கனது இருக்கை சேர்ந்தார்-மதங்கனென்னும்முனிவனது ஆச்சிரமத்தை அடைந்தார்கள்; (எ - று.)

மானவர் - வைவசுவதமநுவின் வமிசத்திற் பிறந்தவர்; வடமொழித் தத்திதாந்தநாமம். மானம் அ குமரர் என்றும் பிரித்துப் பொருள்கூறலாம். இரட்டை - இரண்டு என்னும் மென்றொடர் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்றது. இருக்கை - இருக்குமிடம்: தொழிலாகுபெயர். வழிக்கொண்டு - பிரயாணப்பட்டு. மதங்காச்சிரமம், பம்பாநதிக்கு மேற்குக்கரைப்பக்கத்திலுள்ள தென்று முதனூல் கூறும். பி-ம்:—[1]ஆனபின். [2]அந்தரமெழுந்து, அந்தரத்தவனும். [3]மானவன். [4]இறுக்குங்காலை. [5]இரட்டியான. (ககசுரு)

கவந்தப்படலம் முற்றிற்று.

## பதின்மூன்றாவது

## சவரி பிறப்பு நீங்கு படலம்.

சவரியென்பவள் தான்வசிக்கும் மதங்காச்சிரமத்துக்கு இராமலக்ஷ்மணர் எழுந்தருளுஞ் செய்தியை முன்னமேஅறிந்து எதிர்நோக்கி அவ்வனத்திலுள்ள நல்ல கனிகளைச் சேர்த்துவைத்துக்கொண்டிருந்து அவர்கள்அவ்வாச்சிரமத்துக்குஎழுந்தருளியவுடன் அப்பழங்களை அவர்கட்குக் கொடுத்து உபசரித்து இராமபிரானருளால் தனதுபிறப்பையொழித்து நல்லகதியையடைந்ததைக் கூறும் பாகம். சபரீ - வடசொல்: இவள், மதங்காது சிஷ்யர்களுக்கு உபசாரஞ்செய்துகொண்டு அவ்வாச்சிரமத்திலேயே வசித்துவந்த துறவறம் பூண்ட ஓர் தவப்பெண். க்ஷத்திரியஜாதிஸ்த்ரீயினிடம் வைசியஜாதிபுருஷ

னுக்குப் பிறந்த பிரதிலோமஜாதியார் சபரரெனப்படுவர்; இச்சாதியார் தொழில் - தேன்கொணர்ந்துவிற்றல். சபரனென்பதன் பெண்பால், சபரீ. பிறப்புநீங்குதல் - மீண்டும்பிறவாதபடி முத்திப்பேரின்பத்தையடைதல். இக் காரியம், காரணமான வீடடைதலைக் குறித்தலால், காரணத்தைக்காரியத் தாற்கூறின உபசாரவழக்கு; பிறப்பு நீங்குதற்கு வீடடைதல் காரணம்.

**க.—மதங்காச்சிரம வர்ணனை.**

கண்ணிய தருதற் கொத்த கற்பக தருவு மென்ன
[1]நண்ணிய நல்குந் [2]தெய்வக் கடிநறுஞ் சோலை [3]ஞால
மெண்ணிய வின்ப மன்றித் துன்பங்க ளில்லை யான
புண்ணியம் புரிந்தோர் வைகுந் துறக்கமே [4]போன்ற தன்றே.

(இ - ள்.) கண்ணிய தருதற்கு ஒத்த கற்பக தருவும் என்ன - நினைத் தவைகளைத் தரவல்ல கற்பகவிருட்சம் என்றுசொல்லும்படி, நண்ணிய மனத் தினால்விரும்பினவற்றை, நல்கும் - கொடுக்கிற, தெய்வம் - தெய்வத்தன்மை யுள்ள, கடி நறு சோலை - விளக்கமுள்ள வாசனைவீசுகின்ற (மதங்காச்சிரமத் தின்) சோலையானது,—ஞாலம் எண்ணிய இன்பம் அன்றி - உலகத்தார் மனத்தால்விரும்பிக்கருதுகின்ற இன்பமே யல்லாமல், துன்பங்கள் இல்லை ஆன - துன்பங்களே யில்லாத, புண்ணியம் புரிந்தோர் வைகும் துறக்கமே - நல்வினைசெய்தவர்கள் சென்று சேர்கிற சுவர்க்கலோகத்தையே, போன்றது - ஒத்திருந்தது; (எ - று.)

கற்பகம்போன்ற மரங்களை யுடைமையாலும், இன்பத்தையளித்தலா லும், அச்சோலைக்குச் சுவர்க்கம் உவமையாம். வேண்டியவர்வேண்டியவற் றைக் கொடுக்கிற கல்பகவிருட்சம் ஐந்தையே யுடைய சுவர்க்கத்தினும் மேலாக இச்சோலையில் அத்தன்மைய பல மரங்கள் உள்ளன வென்று வேற் றுமையணி தொனிக்கக் கூறினர். சோலை-மரங்களடர்ந்தஇடம். ஞாலமெண் ணிய துறக்க மெனினுமாம்; சுவர்க்கத்துக்கு 'ஞாலமெண்ணிய' என்ற அடைமொழி கொடுத்தல், கர்மபூமியாகிய மண்ணுலகத்திற் பிறந்தவரே புண் ணியஞ்செய்து சுவர்க்கஞ்சேர்தற்கு உரியவ ராதலா லென்க. கண்ணிய - பெயர். உண்ணிய - செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். தருவும், உம் - இசைநிறை. ஞாலம் - இடவாகுபெயர். அன்றே - ஈற்றசை. பி - ம்:—[1]உண்ணிய. [2]செல்லுறு. [3]சாரல். [4]போலும். (கககூசு)

**உ.—இராமன் சவரியைக்கண்டு க்ஷேமம்விசாரித்தல்.**

[1]அன்னதா மிருக்கை நண்ணி யாண்டுநின் றளவில் காலந்
தன்னையே நினைந்து நோற்குஞ் சவரியைத் தலைப்பட் டன்னாட்
கின்னுரை யருளித் தீதின் றிருந்தனை போலு மென்றான்
[2]முன்னிவற் கிதுவென் றெண்ண லாவதோர் மூல மில்லான்.

(இ - ள்.) இவற்கு முன் இது என்று எண்ணல் ஆவது ஓர் மூலம் இல் லான் - இவனுக்குமுன் இப்பொருள் உள்ளதென்று எண்ணக்கூடிய ஒரு

முதற்பொருள் [காரணம்] இல்லாத [எல்லாவற்றிக்கும் முதல்வனான] இராம பிரான், — அன்னது ஆம் இருக்கை நண்ணி - அப்படிப்பட்டதான மதங்காச்சிரமத்தை யடைந்து, ஆண்டுநின்று அளவு இல் காலம் தன்னையே நினைந்து நோற்கும் சவரியை தலைப்பட்டு - அவ்வாச்சிரமத்திலேயே யிருந்துகொண்டு பலகாலமாக (ப் பரம்பொருளான) தன்னையே தியானித்துத் தவஞ்செய்கிற சவரியென்பவளைக் கிட்டி, அன்னாட்கு இன் உரை அருளி-அவளுக்குஇனிய வசனங்களைச் சொல்லி, 'தீது இன்று இருந்தனை போலும்-'நீ யாதொருதுன்பமுமின்றி இருக்கின்றனையா?' என்றான் - என்று க்ஷேமம் விசாரித்தான்.

காரணமென்பது காரியத்துக்கு நியதமாய் முன்நிற்ப தாதலால், அவ்வியற்கை விளங்க, மூலம் என்பதற்கு முன்னிவற் கிதுவென் றெண்ணலாவது' என அடைமொழி கொடுத்தார்; இதனால், இராமனே எல்லாவற்றுக்கும் மூலமான பரம்பொரு ளென்பது விளங்கும். 'தீதின்று' என்பதில், இன்று என்பது - இன்றி யென்னும் எதிர்மறைக்குறிப்பு வினையெச்சத்தின் திரிபு; இதனை முற்றெச்சமாகக்கொள்வது நேரென்று சிலர்கொள்கை. 'இருந்தனைபோலும்' என்ற இதில், போலும் என்னும் அசைச்சொல்-ஓசை வேறுபாட்டால் வினாப்பொருளை உணர்த்திநின்றது. பி-ம்:—[1]அன்னவ ணிருக்கைநீங்கி. [2]முன்னவற்கிது. (ககக௭)

## ௩.—சவரி இராமனுக்கு விருந்துசெய்து உபசரித்தல்.

ஆண்டவ ளன்பி னேத்தி யழுதிழி யருவிக் கண்ணள்
மாண்டதென் மாயப் பாசம் வந்தது வரம்பில் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம் போயது பிறவி [1]யென்பாள்
வேண்டிய [2]கொணர்ந்து நல்கி விருந்துசெய் திருந்த வேலை.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, அவள் - அந்தச்சவரி, அன்பின் ஏத்தி - பக்தியோடு புகழ்ந்து, அழுது இழி அருவி கண்ணள் - (ஆனந்த மிகுதியால்) அழுது பெருகுகிற நீரருவிகள் பொருந்திய கண்களையுடையவளாய், 'என் மாயம் பாசம் மாண்டது - (உன்னைத்தரிசிக்கப்பெற்றதனால்) எனது மாயமான உலகப்பற்று நீங்கியது; வரம்பு இல் காலம் பூண்ட மா தவத்தின் செல்வம் வந்தது - அளவற்றபலகாலமாக யான்மேற்கொண்டு செய்த பெருந்தவத்தின் பயன் சித்தித்தது: பிறவி போயது - பிறப்பு ஒழிந்தது,' என்பாள் - என்றுசொல்லி, வேண்டிய கொணர்ந்து நல்கி விருந்து செய்து இருந்த வேலை - (நல்லவையென்று தான்) விரும்பிச் சேர்த்து வைத்த பழம்முதலியவற்றைக் கொணர்ந்து விருந்துசெய்திருந்த சமயத்தில், —(எ - று.)—இது, ஐந்தாம்பாட்டிலுள்ள "என்ன" என்ற எச்சத்தைக் கொண்டு முடியும்.

இங்குக் கண்ணீர், ஆனந்தத்தின்மிகுதியா லானது. மாண்டது, போயது-தெளிவுபற்றிய காலவழுவமைதி. இராமன் தன்னிடம் வரும்போது அவனுக்குத்தரவேண்டுமென்று இவள் பல கனிகளை ருசிபார்த்து இனிய

வற்றைத் தேர்ந்து வைத்திருந்தமை தோன்ற, 'வேண்டிய' என்றார். [2]கொணர்ந்துநல்க என்ற பாடத்துக்கு - வேண்டியவற்றைச் சவரி கொணர்ந்து நல்க இராமன் அவ்விருந்துணவை அமுதுசெய்திருந்த பொழுதி லென்க. பி-ம்:--[1]என்றாள். [2]தவத்தினுளுமேவிடங்கொண்டுபுக்காள். (௧௧௯௮)

## ௪.—பிரமன்முதலியோர் தன்னைத் தத்தம்உலகிற்கு வரும்படி அழைத்தன ரென்று சவரி கூறுதல்.

ஈசனுங் கமலத் தோனு மிமையவர் யாரு மெந்தை
வாசவன் றானு மீண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி
யாசறு தவத்திற் கெல்லை யணுகிய திராமற் காய
பூசனை விரும்பி யெம்பாற் போதுதி யென்று போனார்.

(இ - ள்.) எந்தை - எமது தலைவனே! ஈசனும் - சிவபிரானும், கமலத்தோனும்-(திருமாலின் உந்திக்) கமலத்தில் தோன்றிய பிரமதேவனும், இமையவர் யாரும் - தேவர்கள் யாவரும், வாசவன் தானும்-இந்திரனும், ஈண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி - இங்கு வந்து மகிழ்ச்சியுடன் (என்னைப்) பார்த்து, 'ஆசு அறு தவத்திற்கு எல்லை அணுகியது-(உனது) குற்றமற்ற தவத்துக்குச் சித்திபெறுங்காலம் நெருங்கிவிட்டது: இராமற்கு ஆய பூசனை விரும்பி - (சிறிதுகாலம் இங்கேயிருந்து இங்குஎழுந்தருளப்போகிற) இராமபிரானுக்குத் தக்க உபசாரங்களை விரும்பிச்செய்து, (பிறகு); எம்பால் போதுதி - எமது உலகத்துக்கு வருவாயாக,' என்று - என்றுகூறி, போனார் - சென்றார்கள்; (எ - று.)

இவள் பெருந்தவஞ்செய்தவ ளாகையால், இவள்வருவது தமக்குப்பெருமை யென்று எண்ணி, பிரமன் முதலியோர் இவளைத் தம் உலகத்துக்கு அழைப்பவராயின ரென்க. இச்செய்தி முதனூலிற்கூறப்படவில்லை; அதில் மதங்கசிஷ்யர்கள் இவளைநோக்கி'லக்ஷ்மணனோடுகூடிய இராமபிரான் வருவார்; அவருக்கு அதிதிபூசைசெய்து பிறகு நல்லுலகமடைவாய்'என்றுகூறினதாகச் சொல்லியிருக்கிறது. (௧௧௯௯)

## ௫.—சவரி இராமனைப் புகழ, இராமன் அவளைநோக்கி முகமன்கூறுதல்.

இருந்தன னெந்தை நீயீண் டெய்துதி யென்னுந் தன்மை
பொருந்திட வின்று தானென் புண்ணியம் பூத்த [1]தென்ன
வருந்தவத் தரசி தன்னை யன்புற நோக்கி [2]யெங்கள்
வருந்துறு துயரந் [3]தீர்த்தா யம்மனை வாழி [4]யென்றான்.

(இ - ள்.) எந்தை-எமது தலைவனே! நீ ஈண்டு எய்துதி என்னும் தன்மை பொருந்திட - இங்கே நீ வரப்போகிறாய் என்ற செய்தி தெரிந்ததனால், இருந்தனன்-(உனது வருகையை எதிர்நோக்கிக்கொண்டு)இருந்தேன்; (அவ்வாறே நீ எழுந்தருளியதனால்), இன்று தான் என் புண்ணியம் பூத்தது - இப்போது

தான் எனது தவம் பலித்தது, என்ன - என்று புகழ்ந்துகூற,—(இராமலக்ஷ்மணர்), அரு தவத்து அரசிதன்னை அன்புஉற நோக்கி-மிக்கதவத்தையுடையவளான அச்சவரியை அன்போடு பார்த்து, 'அம்மனை - தாயே! எங்கள் வருந்துறு துயரம் தீர்த்தாய் - எங்களது வருத்தம்பொருந்திய வழிநடைத்துன்பத்தை (நீசெய்த உபசாரத்தால்) தீர்த்தாய்; வாழி - வாழ்வாயாக,' என்றார்- என்று கூறினார்கள்; (எ - று.)

இவர்கள் அவளை 'அம்மனை' என்றுகூறியது, அன்புபற்றிய மரபுவழுவமைதி; அவளது உயர்வையுங் காட்டும். வாழி - வாழிய என்னும் வியங்கோள் முற்றின் விகாரம். பி-ம்:—[1]என்ற. [2]நங்கள். [3]தீர்ப்பாயெம்மனைவாழ்தி. [4]என்றான். (கஉ௦௦)

இப்பாடலின்பின் சிலஏட்டுப்பிரதிகளிற் காணப்படும் பாடலொன்று வருமாறு:—

மாங்கனி தாழை யின்காய் வாழையின் கனிகளோடு
மாங்கனி யாவதேயென் றருந்திநான் விரும்பி வைத்தேன்
பாங்கினி தமுதுசெய்மி னென்றவள் பரிவி னல்குந்
தேங்கனி யினிதி னுண்டு திருவுள மகிழ்ந்த வீரன்.

௬.—சவரி அவர்களுக்குச் சுக்கிரீவனுள்ளவிடத்துக்குச் செல்லும் வழியைக் கூறுதல்.

அனகனு மிளைய கோவு மன்றவ ணுறைந்த பின்றை
வினையறு நோன்பி னாளு மெய்ம்மையி னோக்கி வெய்ய
துனைபரித் தேரோன் மைந்த னிருந்தவத் துளக்கில் குன்ற
நினைவரி தாயற் கொத்த நெறியெலா நினைந்து சொன்னாள்.

(இ - ள்.) அனகனும்-குற்றமற்றவனாகிய இராமபிரானும், இளைய கோவும் - இளையபெருமாளான இலக்குமணனும், அன்று அவண் உறைந்த பின்றை - அப்பொழுது அங்கு வசிக்குஞ்சமயத்தில்,—வினை அறு நோன்பினாளும் - தீவினைகள் அழிதற்குக்காரணமான தவத்தையுடையளான சவரியும், மெய்ம்மையின் நோக்கி - (அவர்களை) மெய்யன்போடுபார்த்து,—வெய்ய துனை பரி தேரோன் மைந்தன் இருந்த அ துளக்கு இல் குன்றம் - வெப்பமுடையவனும் வேகமாகச்செல்லுங் குதிரைகட்டியதேருடையவனுமான சூரியனது மகனான சுக்ரீவன் வசிக்கிற அழிவற்ற அந்த (ருசியமூகமென்னும்) மலையினது, நினைவு அரிது ஆயற்கு ஒத்த நெறி எலாம் - நினைக்கமுடியாததும் ஆராயத்தக்கதும் [மிகக்கொடியதும்] ஆன வழிமுழுவதையும், நினைந்து சொன்னாள் - ஆலோசித்துச்சொன்னாள்; (எ - று.)

இச்செய்தி முதனூலில் இல்லை; அதில், இவ்விவரத்தையுங் கவந்தனே கூறியதாகவுள்ளது. அகம்-தோஷம்; அதுஇல்லாதவன்-அநகன். துளக்கு- துளங்குஎன்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். (கஉ௦க)

எ.—சவரிகூறினவற்றை இராமன் கேட்டல்.

வீட்டினுக் கமைவ தான மெய்ந்நெறி வெளியிற் றாகக்
காட்டுறு மறிஞ ரென்ன வன்னவள் கழறிற் றெல்லாங்
கேட்டன னென்ப மன்னோ கேள்வியாற் செவிகண் முற்றுந்
தோட்டவ ருணர்வி னுண்ணு மமுதத்தின் சுவையாய் நின்றான்.

(இ - ள்.) கேள்வியால் செவிகள் முற்றும் தோட்டவர் - கேள்விகளினால் (தங்கள்)காதுகள் முழுதும் துளைக்கப்பட்டவராகிய பெரியோர், உணர்வின் உண்ணும்-(தங்கள்) தத்துவஞானத்தினால் நுகர்கிற, அமுதத்தின் சுவை ஆய் நின்றான் - அமிருதத்தின் ருசியாயிருக்கின்ற இராமபிரான்,—வீட்டினுக்கு அமைவது ஆன மெய் நெறி வெளியிற்று ஆக காட்டுறும் அறிஞர் என்ன - மோட்சவுலகத்துக்குப் போவதற்கு உரியதான உண்மைநெறியை வெளிப்படையாக [நன்றாக]த் தெரிவிக்கிற அறிவையுடைய நல்லாசிரியர் போல, அன்னவள் கழறிற்று எல்லாம் - அந்தச்சபரி கூறியவற்றையெல்லாம், கேட்டனன்—; (எ - று.)—என்ப, மன், ஓ - அசைகள்.

ஒருவர் நற்கதியடைந்து உய்யுமாறு அவர்க்கு நல்லாசிரியர் முத்திமார்க்கத்தைக் கூறுதல்போல, இராமன் சுக்கிரீவனைச்சேர்ந்து தன்கருத்துமுற்றும்படி அவ்விடத்திற்குச்செல்லும்வழிகளை அவனுக்குச் சபரி தெரிவித்தனளென்பதாம். "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால், தோட்கப் படாத செவி" என்ற திருக்குறளும், 'கேள்வியாவது - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்,' 'மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கலின், கேள்வியைக் கருவியாக்கிக் கூறினார்; பழைய துளை துளையன்று என்பதாம்' என்ற பரிமேலழகருரைவாக்கியங்களும், 'கேள்வியாற்செவிகள் முற்றுந்தோட்டவர்' என்றவிடத்து உணரத்தக்கன. பெரியோரிடத்துக் கேட்டறிந்த நுண்ணறிவுடையவரே தங்கள் தத்துவ ஞானத்தினால் பரம்பொருளான தன்னைப் பலபடியாலும் இன்பமுற அனுபவிக்கப்பெறுபவன் இராமனென்பது, ஈற்றடியின்கருத்து. கழறிற்று எல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். நின்றான் - இறந்தகாலவிடைநிலை காலத்தைக் காட்டாது தன்மை யுணர்த்திற்று. (கஉ0உ)

அ.—சவரி முத்தியடைய, இராமலட்சுமணர் அப்பாற்செல்லுதல்.

பின்னவ [1]ளுழன்று பெற்ற யோகத்தின் பெற்றி யாலே
தன்னுட றுறந்து [2]தானத் தனிமையி னினிது சார்ந்தா
[3]ளன்னது கண்ட வீர ரதிசய [4]மளவின் றெய்திப்
பொன்னடிக் கழல்க ளார்ப்பப் புகன்றமா நெறியிற் போனார்.

(இ - ள்.) பின் - பிறகு, அவள்-அந்தச்சவரி, உழன்று பெற்ற யோகத்தின் பெற்றியாலே - மெய்வருந்திச் செய்து பெற்ற தவத்தின் பயனால், தன் உடல் துறந்து - தனது உடம்பை விட்டு [இறந்து], அ தனிமையின் - ஒப்பற்றதான அந்த முத்தியுலகத்தில், இனிது சார்ந்தாள் - இனிமையாகச்

சென்று சேர்ந்தாள்; அன்னது கண்ட வீரர் - அச்செயலைப் பார்த்துநின்ற இராமலக்ஷ்மணர்கள், அதிசயம் அளவு இன்று எய்தி - ஆச்சரியத்தை மிகுதி யாகப் பொருந்தி, அடி பொன் கழல்கள் ஆர்ப்ப - (தங்கள்) திருவடிகளிற் கட்டிய பொன்னாலான வீரக்கழல்கள் ஒலிக்கும்படி, புகன்ற மா நெறியில் போனார் - (சவரியாற்) கூறப்பட்ட பெரிய (காட்டு)வழியிற் போனார்கள்; (எ - று.)—தான் - அசை.

இராமலக்ஷ்மணர்களுக்கு அதிதிபூசைசெய்வதற்குக் காத்திருந்த சவரி அவ்வாறே அவ்விருவர்க்கும் அதனைச் செய்தபின்பு அவர்களனுமதிபெற்று அக்கினியில் உடலைத்துறந்து தன்யோகமகிமையால் நற்கதிபெற்றன ளென்று முதனூல் கூறும். பி-ம்:—[1]உழந்து. [2]வானம். [3]அன்னவை. [4]அளவிற்று. (கஉ௦௩)

## கூ.—இராமலட்சுமணர் பம்பைப்பொய்கையை யடைதல்.

[1]தண்ணெனுங் கானுங் குன்றுந் [2]திசைகளுந் தவிரப் போனார்
மண்ணிடை வைக றோறும் [3]வரம்பிலா மாக்க ளாடக்
கண்ணிய வினைக ளென்னுங் கட்டழல் [4]கதுவ லாலே
புண்ணிய [5]முருகிற் றன்ன பம்பையாம் பொய்கை புக்கார்.

(இ-ள்.) (இராமலட்சுமணர்), தண் எனும் கானும் குன்றும் திசைகளும் தவிர போனார் - குளிர்ந்துள்ள காடுகளும் மலைகளும் திசைகளும் பின்னாகும்படி [அவற்றைக்கடந்து] சென்றவர்களாய்,—வைகல்தோறும் மண்ணிடை வரம்பு இலா மாக்கள் ஆட-நாடோறும் பூமியிலுள்ள கணக்கில்லாத மனிதர்கள் வந்து நீராடுதலினால், கண்ணிய வினைகள் என்னும் கட்டு அழல் கதுவலாலே - (அவர்களிடத்து) மிக்குள்ள தீவினைகளாகிய பெருந்தீ வெதுப்புதலினாலே, புண்ணியம் உருகிற்று அன்ன - புண்ணியம் உருகினது போலத் தோன்றுகிற, பம்பை ஆம் பொய்கை - பம்பையென்னும் சரசை, புக்கார் - அடைந்தார்கள்; (எ - று.)

**உருவகத்தை** அங்கமாகக் கொண்டு வந்த **தற்குறிப்பேற்றவணி.** தன்னில் மூழ்கினோரது பாவத்தைத் தவறாது ஒழிக்குமென்பது, பின்மூன்றடிகளின் கருத்து. பொய்கை - மானிடராக்காத நீர்நிலை. பி-ம்:—[1]தண்ணறுங், தண்ணுறுங். [2]நதிகளும். [3]வரம்பிலாதாடுமாக்கள். [4]கழிதலாலே, அவிதலாலே. [5]மருங்கிற்றன்ன, உருவிற்றன்ன. (கஉ௦௪)

சவரி பிறப்புநீங்குபடலம் முற்றிற்று.

---

# ஆரணியகாண்டம்

# முற்றுப்பெற்றது.

---

## கம்பராமாயணத்தின்

# ஆரணியகாண்டச் செய்யுண் முதற்குறிப்பகராதி.



கம்பராமாயணத்து

# ஆரணியகாண்டத்தின் அரும்பதவகராதி முதலியன.*





* இங்குக் காட்டப்படுபவை - படலப்பெயரின் முதற்குறிப்பும், படலச்செய்யுள்களி னெண்ணும்.

இராமன்பிறந்ததின்பயன் அரக்கர் வலிதொலைத்தல், அகத்-19
இராமன் மானைத்தொடர்ந்தவிசைவருணனை, மாரீச-242
இராமன்முகம் தாமரைப்பூவையொவ்வா: மதி கதிர்தேய்ப்பதலும் மறுவுடையதுமாதலால் அதுவும் ஒவ்வா, சூர்ப்ப-17
இராமன்முன் (பொரத்) தாடகைன் வருதல் X கூற்றெதிராவிசெல்லுதல், கரன்-157
இராமன்முனியிற் பஞ்சபூதங்களும் பேரும், சடாயுவு-7
இராமன் மேல்அரக்கர் (பொருமாறு) திரண்டுவருதல் X சூரியன்மேல் இருள்திரண்டுவருதல், கரன்-28
இராமன்வந்தது அமரர்யாவரொடும் எவ்வுலகும் வந்ததாகும், விராத-4
இராமன்வருகையால் அத்திரிமுனிவன் தமரெலாம் வரவுகந்தனைய தன்மையன், விராத-4
இராமன் வனம்புகுந்ததனால் வேந்தன் வீதல் முதலியன நிகழினும் முனிவர்க்குதவ வழியுள்ளதனால் புண்ணியமே, அகத்-18
இராமன் வில் அம்புதொடுக்க வளைக்கையிலிறுதல், கரன்-175
இராமன்வில்லொன்றிற் கடிகைமூன்றில் கரன்முதல்வீரர் விண்ணிலேறினர், மாரீச-64
இராமன் றுங்கவரைப்புயத்தினிடைக் கிடந்த பேராசை, மாரீச-1
இராமனதுகோபத்தால் இலக்குமணனும் அஞ்சுதல், சடாயுவு-207
இராமனதுவடிவம் X குவளைக்கானத்திடையிடைமலர்ந்துநின்ற கமலம், சூர்ப்ப-6
இராமனழகு அணிகலனால் மேற்படாது X மணிக்கரசு வேறொருமணியால் விளங்காது, சூர்ப்ப-24
இராமனதியர் தண்டகவனத்துமுனிவராச்சிரமங்களிற் பத்துவருடங்கள் கழித்தமை, அகத்-26
இராமனால் இமைப்பிலர் உய்ந்தனர், தவத்தோர்உயிர்த்தனர், அந்தணரறத்தினெறிநின்றனர், அகத்-44 எவ்வம் வந்தழைப்பின் மேல் கிழண்டங்கள் உடைந்து போம், சடாயுவு-8
இராமனுக்குப் புவனமூன்றுமேயன்றி முப்பதுகோடியென்றபோதும் எதிரல, அகத்-24
இராமனுக்குரியசீதையை இராவணன் விரும்புதல் X எரியிற்புனிதரீயு மவியை நாய்வேட்டல், சடாயுவு-69
இராமனுக்கேற்றமோர் திண்மையாரிலர், சடாயுவு-5
இராமனுஞ்சீதையுங்கமலத்துக்கடவுள் உலகமூன்றிலிருநிறத்தார்க்குஞ்செய்தவரம்பு இவரிருவர், சூர்ப்ப-61
இராமனும் அகத்தியனும் பரஸ்பரம் கூறியமுகமன், அகத்-49-51
இராமனைக்கண்ட(நல்லுணர்வுபெற்ற) கவந்தன் X தாயைக்கண்ணுற்ற கன்று, கவந்த-51
இராமனைச்சூழ்ந்த சேனைத்தலைவர் (மாண்டு)பிரிதல் X கதிர்தழுவிய ஊர் பிரிதல், கரன்-99
இராமனைச் சேனைத்தலைவர்வளைத்தல் X சிவபெருமானை முப்புரர் வளைத்தல், கரன்-97
இராமனைச் சேனையோடும் வளைத்த கரன் X இந்துவைவளைக்கும் எழிலிக்குலம், கரன்-163
இராமனைப்பிரிந்தசீதை X துணைபிரிந்தவன்றிற்பெடை, சடாயுவு-131
இராமனைவளைத்து அரக்கர் கணைமுதலியபடைகள் சொரிதல் X மலையை வளைத்தனவாய் மேகம்தூய தாரைகள்சொரிதல், கரன்-85 [191
இராமனொடித்தவில் மேருமலை, மாரீச-
இராவணன், சரப-13
இராவணன் கண்ணியர்கண்ணின்வெள்ளத்திருந்தனன், மாரீச-23
இராவணன்கைப்பட்டசீதை X இராகுவின் வாய்ப்பட்டமதி, அயோமு-12
இராவணன்கொண்ட சன்னியாசிவேடம், சடாயுவு-20-23
இராவணன சூர்ப்பணகையினுறுப்பு அறுபட்டதற்காகத் தன்னைப்பழித்தல், மாரீச-58-61
இராவணன் சூர்ப்பணகையுறுப்பறுபட்டிருப்பதுகண்டு இது யாவர்செயலெனல், மாரீச-49

கண்ணீர்குருதியோடு நிலத்தைச்சேரு க்குதல், சூர்ப்ப-115
கண்ணீர்நிலனுறப்புலர்கின்றாள், கரன்-64
கண்ணீருகுத்தல் × (கானம்) தேனுகுத்தல், (மலை) அருவிசிந்துதல், அயோமு-2
கண்ணீளியவல்ல நெடிதுமார்பு, சூர்ப்ப-16
கண்ணுதல்-செய்யநினைத்தல், சூர்ப்ப-140: கருதுதல், சடாயுவு-213
கண்ணெனத்தெரிந்தசெந்தாமரை கங்குற்போதுங் குவிந்திலாமை, அயோமுகி-4
கண்ணோட்டம், மாரீச-139
கண்பனிசோர, சூர்ப்ப-3
கண்பால்-கண்ணெதிர், மாரீச-150
கண்மலர்கானிற்படர்கண்வண்டு, சரப-4
கண்மனமெனக்களித்தல், சடாயுவு-28
கண்மேலொளிதொடர்தல், சடாயுவு-122
கண்வளராய் - கண்வளர்பவனே! சரப-28
கணவரைத்தழுவியமனைவி × பணைகளைத்தழுவியபவளவல்லி, மாரீச-121
கணம்-கூட்டம், சடாயுகா-28
கணிச்சி-மழுவாயுதம், அகத்-41
கணிதம், விராத-18
கணிதமாக்கள்-காலக்கணக்கர், மாரீச-129
கணை-அம்பு, விராத-32: × எரி, விராத-34
கணைத்தூணி, அகத்-20
கணை தீயுருவ, கால்விசைய, செவ்வியுடன் வெவ்வாயின, கரன்-172
கத்துரு, சடாயுகா-29
கதம்-கோபம், விராத-21
கதழ்தல்-மூளுதல், கரன்-81
கதழ்வம்-அக்கினி, விராத-45
கதழெரி-உக்கிரமான அக்கினி, சரப-42
கதி-நடை, விராத-36
கதியுறுபொறி - விரைவுபொருந்திய இந்திரியம், மாரீச-86
கதிர் × செம்மணி, சரப-10
கதிர்வாள், சூர்ப்ப-96
கதிரவன்கலங்கிநீங்க விண்டனினின்ற கரன், கரன்-67
கதிரவன்சிறுவனை கனகவாணிறத்தினன், கவந்த 57
கதிரிளங்கொங்கை, சூர்ப்ப-78
கதிரினயகன், சூர்ப்ப-20
கதுவ-பற்ற, விராத-21
கதுவுதல் - கவ்வுதல், சென்றுபற்றுதல, சரப-24
கந்தம் நறுமணம், சூர்ப்ப-91
கந்தர்ப்பர், கரன்-47
கப்பணப்படை, கரன்-35
கபந்தஸ்தோத்ரம், கவந்த-42-50
கம்-மேகம், சடாயுவு-45
கம்பம்-கட்டுத்தறி, நடுக்கம், சரப-22
கம்பித்தல் நடுங்குதல், மாரீச-186
கமண்டலு, அகத்-48
கமித்தல்-பொறுத்தல், அயோமு-57
கமையாள்-பொறுமையையுடையவள், அயோமு-76
கயம்-குளம், மாரீச-18
கரக்கருங்கொடுந்தொழில் - வெளிப்படையாகச்செய்கின்ற கொடுந்தொழில், அகத்-6
கரங்கிடந்தகொம்பொடிதல், மாரீச-93
கரண்டம்-நீர்க்காக்கை, சடாயுவு-63
கரத்தல் மறுத்தல், அயோமு-42
கரதூடணர், சூர்ப்ப-113
கரபத்திரம்-வாள், மாரீச-133
கரம்-கை, விராத-29
கரமிறுத்தல்-கப்பங்கட்டுதல், சூர்ப்ப-124
கரவல் ஒளித்தல், சடாயுகா-21
கரன், மாரீச - 183: கரன் அரனோ அரியோ அயனோஎனும் ஆற்றலான், சூர்ப்ப-107: காற்றினிலுங் கனலினிலுங் கொடியான், சூர்ப்ப-143: சங்கரற்குந்தடுப்பருந்தன்மையான், கரன் - 22: கரன் குருதியோதமதிலுள்ளான் × மந்தரம் நெடுங்கடலினிடை யுள்ளது, கரன்-169: கரன் தேரைச் சேனைவீரர்சூழ்ந்திருத்தல், × மேருவைக் கடல்சூழ்ந்திருத்தல், கரன் - 52: கரன்யுத்தம், கரன் - 162-185
கராம்-முதலை, விராத-49
கரி, விராத-6

கைம்மலை × சுறவம், கரன்-120
கைம்மாறு, சரப-28
கையறவு - செயலறுகை, அயோமு-3: துன்பம், சூர்ப்ப-107
கையிலகலுதல் - கைவிட்டுப்போதல், மாரீச-44
கையின்வளைத்து உயிர்வாரி வாயினிட்டுண்கை, கரன் 46
கையெறிந்துநகுதல், சடாயுவு-82
கையெனும்மலரால் மலர் கொய்குறுவாள், மாரீச- 215 [99
கையைநிலத்தினிலெற்றுதல், சூர்ப்ப-
கைலை × சடாயு, சடாயுவு 92
கைலையெடுத்தவரலாறு, மாரீச-12
கைவிடில், சடாயுகா 34
கைவிதிர்த்தல், சடாயுவு-120
கொங்கு நறுமணம், சடாயுவு 1
கொங்கை × நேமிவாளம், சூர்ப்ப - 4: × செம்பொன் குலிகச்செப்பு, மாரீச-68
கொங்கையிணை செங்கையின்மலைதல், மாரீச-43
கொச்சைமாந்தர், கரன்-142
கொட்பு-தன்மை, அயோமு-45
கொடாதவன் புகழ்தேய்தல், சூர்ப்ப-26
கொடிஞ்சு-தேருறுப்பு, கரன்-149
கொடிமுதலியனமிடைதலால் உலகு வெயிலிழத்தல், கரன்-48
கொடிமூக்கு, சூர்ப்ப-119, 120
கொடியாடுதல் × அலகையாடுதல், கரன்-26 [19
கொடுந்தொழில் × உருமேறு, விராத-
கொண்டனிறத்தினன், கரன்-179
கொண்டார் - மணஞ்செய்துகொண்டவர், சூர்ப்ப-131
கொத்துதல்-குத்துதல், சடாயுவு-113
கொதித்தல்-கோபங்கொள்ளுதல், சூர்ப்ப-77
கொதிப்பு-உக்கிரம், கரன்-107
கொம்பு-சீதை, சரப 1 [55
கொலைமிசை, மிசை-ஏழனுருபு, கரன்-
கொவ்வைச்செவ்விவாய், சூர்ப்ப-29
கொழு-உழுபடை, கரன்-147
கொழுந்து-இளந்தளிர், சடாயுவு-123
கொள்கை கோட்பாடு, கரன்-13: தன்மை, விராத-4
கொள்கொம் பொடியக் கொடிவீழ்தல் × சடாயுவீழச் சீதைவிழுதல், சடாயுவு-130
கொள்ளை-செழிப்பு, மாரீச-120
கொள்ளைபோகின்றசெல்வம், மாரீச-77
கொன்றனவின்னல், சடாயுவு-12
கொன்றைக்காய் × கூந்தல், மாரீச 94
கோங்கு, சரப-1
கோசலநாட்டிலிராவணன் ஒருமுறை வந்துள்ளானென்பது, சடாயுவு-38
கோசலம் கங்கைநீர்கெழுவுநாடு, சடாயுவு-38
கோசிகனளித்தபடைகள் இராமனருளினிற்பன, மாரீச-194
கோட்டுதல்-வளைத்தல், கரன்-109
கோடணை-ஆரவாரம், கரன்-51
கோடு-மலைச்சிகரம், அயோமு-30: தந்தம், கரன்-149
கோத்துவாங்குதல்-தொடுத்துஎய்தல், கரன் 118
கோதாவரி × சான்றோர்கவி, சடாயுகா-1, சூர்ப்ப-1
கோதாவரி இராமனாதியர் செல்கையில் அலையெழுந்து அடங்குதல் அன்னாரைக்கண்டு அடிபணிவது போலும், சூர்ப்ப-2
கோதாவரிக்குக் கமலம்முகமும், குவளை கண்களும், திரை கரமும், சூர்ப்ப-2
கோதாவரியைச் சீதை தன்நிலையை இராமனுக்குத் தெரிவிக்குமாறுவேண்டுதல், சடாயுவு-80
கோதை - நாண்: விராத-24: கூந்தல், விராத-39: பூமாலை, விரற்சட்டை, மாரீச-192
கோபக்கனல், கரன்-9
கோபம்முதலிய சீதையின் விஷயமான காமநோயாற் பற்றுநீங்குதல் × பாபம் நின்றிடத்துத் தருமம் நில்லாது நீங்குதல், மாரீச-82
கோமகன்-அரசகுமாரன், சூர்ப்ப 34
கோயில்-அரண்மனை, சடாயுவு-45
கோரவெங்கண், விராத-19
கோல் - தடி, கரன் - 35: =கோலம்-அழகு, சடாயுவு-75

சந்து - சந்தனம், விராத-5
சம்பரன் X மத்து: உடைத்தலிலுவமை: சடாயுகா-23
சம்பரனால் இந்திரன்பழிபடைத்ததும் தயரதனால் அதுநீங்கியதும், சடாயுவு-198
சம்பாதி சடாயுக்கள் அருணன்புத்திரர், சடாயுகா-29
சமயத்தோர் - மதத்தவர், விராத-52
சமயம் - மதம், விராத-57
சமீரணன்-வாயு, மாரீசன்-15
சமைந்தது - பலித்தது, சூர்ப்ப-92
சயந்தனம் - தேர், கரன்-53
சரண்வழங்க, அகத்-36
சரத்தின்தானையால் அணிகளாக நேர் தாங்கினன், கரன்-115
சரதாரைமாரி, சடாயுவு-109
சரம், கரன்-35
சரம் X தையலார்விழி: (கொடுமையில் உவமை), கரன்-82
சரவங்கன், சரப-1
சரளச்சோலை - இனியசோலை, சூர்ப்ப-71
சரளம் - இனிமை, மாரீச-163
சரன், கரன்-62
சராசரம், சடாயுகா 26
சரி - கைவளை, அயோமு-48
சரிந்து - நிலைகுலைந்து, மாரீச-42
சலஞ்சலம், விராத-16
சலம் - தணியாதமுதிர்ந்தவயிரம், சூர்ப்ப-70, 143: மனப்பிணக்கு, மாரீச-240
சலிக்கும் - வருத்துகின்ற, மாரீச-108
சவரி தாயினு முயிர்க்கு நல்குபவள், கவந்த-56
சவியுறத்தெளிதல் - செவ்வைபொருந்தத் தெளிவுறுதல், சூர்ப்ப-1
சவை - சபை, சூர்ப்ப-108
சன்னவீரம்-வெற்றிமாலை, விராத-12
சனகன்பொன், விராத-5
சனகி, சடாயுவு-39
சாகை - கிளை, சடாயுவு-89
சாதித்தல்-கொல்லுதல், வெல்லுதல்; விராத-22
சாபம்-வில், கரன்-35: சடாயுவு-101
சாம்புதல் - சோர்ந்துகிடத்தல், சடாயுவு-138

சாமரை இசைகட்டியனபோலும்' சரப-8
சாயல், மாரீச-85
சார்பு - தஞ்சம், சடாயுவு-130
சார-சேர்க, சூர்ப்ப-53
சாரதி, சடாயுவு-175
- மண்டலாகாரமான கதி, விராத-37
சாலகடங்கடர்மரபு, சூர்ப்ப 50
சாலம்-ஆச்சாமரம்,மாரீச-96:தொகுதி, கரன்-42
சாலி - செந்நெல், கரன்-149
சாலை-குடிசை, அகத்-10, சூர்ப்ப-7
சாலைகாத்தனன் புறத்துநின்றான், மாரீச-239
சாளரம், மாரீச-157
சான்றவன், கவந்த-42
சான்று - திருஷ்டாந்தம், கரன்-128
சானகி, அயோமு-96
சிக்கு - ஐயம், சடாயுகா-48
சிகரம், விராத-9
சிகை, சுவாலை ("அனலின்சிகை") கரன்-93: ("எரியின்சிகை") சடாயுவு-121: ஒளி, சடாயுகா-2
சிங்கமெனத் தமியன் றிரிவான், அயோமு 39
சிங்காமை - அழியாமை, சரப-29
சிச்சிரம் = சித்ரம்: விநோதம்; அல்லது, சிச்சிலிக்குருவி, சடாயுவு-126
சிசிரம்-பின்பனிக்காலம், மாரீச-99
சிஞ்சுபவனம், சடாயுவு-146
சித்தர், மாரீச-9
சித்திரம்-அழகு, விராத-2
சிதைவு-அழிவு, அகத்-54
கல், சடா யுகா-48 [156
சிந்தாவினை - மனத்தொழில், மாரீச -
சிந்துரச்சென்னிவரை, அயோமு-1
சிந்துரம் - யானை, கரன் - 107: மலை, கரன-102
ல- அதுவேகருத் தாயிருத்தல், அகத்-15
சிந்தையினுறைபவன்-மன்மதன், சூர்பப-12
சிரத்தினிற் பணத்தினோர் - நாகர், மாரீச-72
சிரம் X மலை, கரன்-39

தண்டகவனத்துமுனிவர் இராமனைக் கண்டதனால் மகிழ்தல், அகத்-4

தண்டகவனம், விராத-5, அகத்-3, 51

தண்டல்-கெடுதல், மாரீச-162

தண்டேந்தியகரதலத்தண்ணல்-யமன், மாரீச-11

தண்டொருமூன்று முப்பகைத்தளை யரிதவத்தவர்வடிவு, சடாயுவு-20

தண்ணகர், சடாயுகா-35

தண்ணென்றொழுக்கம்-குளிர்ச்சியான நல்லொழுக்கம், குளிர்ச்சியாய்ப்பெருகுந்தன்மை, சூர்ப்ப-1

தணப்பு-நீங்குதல், கவந்த-20

தத்தி-பாய்ந்து, சடாயுவு-113

தத்துவத்தின்தகைமூர்த்தி, விராத-52

தத்துவநிலையிற்று, மாரீச-201

தத்துறுதல்-தவித்திடுதல், மாரீச-61. துடிப்படைதல், சடாயுவு-106

ததும்பிட-அசைய, மாரீச-42

தந்தம்பறியுண்ட கரி சீறும், கரன்-162

தம்கச்சும் வாளுமே கால்தொடர்ந்து ஈர்க்க அச்சத்தினா லரக்கரழிதல், கரன்-139

தம்பியர்-கரன்முதலோர், மாரீச-65

தமிழ் என்றுமுளதியம்பியிசைகொண்டான், அகத்-47

தமிழ்த்தென்றல், ×கோளரா, அயோமுகி-6

தயமுகனார். சூர்ப்ப-125

தயாவு, மாரீச-126

தயாவுடையகணவன், விராத-39

தரங்கம்×தேர், கரன்-25

தரம்-உத்தமவிலக்கணம், சூர்ப்ப-14

தராவலயம், மாரீச-57

தருக்கினர்கெடுவர், மாரீச-201

தருக்கு-களிப்பு, அகத்-54: கர்வம், கரன்-39

தருணம்-இளமை, சடாயுகா-30

தருமத்தின்றனிமூர்த்தி. விராத-53

தருமந்தன்னைப் பாவம் வெல்லுமோ, சடாயுவு-59

தருமம் நாரங்கொண்டார் நாடுகவர்ந்தார் முதலியோரையீரும், மாரீச-180

தருமமெனநினைந்தவெலா முதவுந்தச்சன், மாரீச-2

தரை-பூமி, சூர்ப்ப-136

தலஞ்சார்த்துதல், கரன்-19

தலை-தலைமை, நுனி, கரன்-113

தலைக்கொண்டு-சிரசாவகித்து,' சடாயுகா-40

தலைகாத்தல்-தலைதப்பித்தல், சூர்ப்ப-126

தலைத்தானை-சிறந்தசேனை, கரன்-113

தலைநிற்றல் - மேற்கொண்டுநடத்தல், சூர்ப்ப-41

தலைபத்தின்மீதுநீட்டும் மூக்கெனுநேமியன் × அனந்தநாகம்வாட்டும் கருடன், சடாயுவு-110

தலைமலையெனவீழ்த்தல், கரன்-86

தலையிற்றாங்கிய கை, மாரீச-24

தலையெடுத்துவிழியாமை, சூர்ப்ப-101

தவ்வாது-குவியாமல், சரப-2

தவஞ்சிறப்புதவ நல்லறிவு கைதரல், அகத்-7

தவஞ்செயத் தவஞ்செய்த தவமென், சூர்ப்ப-18

தவத்துறைநீங்கியது அரக்கர்வருத்தி நெறியலா நெறிதுரத்தலால், அகத்-12

தவம், விராத-2

தவம்ஆயிரம்முகம், சரப-40

தவம் தக்கினையாதல், அகத்-31

தவம்பூண்டும் பொறையால் வெகுளியை நீக்குதல், அகத்-8

தவம் வேண்டின வேண்டினர்க்களிக்கும், அகத்-8

தவமன்றிவேறொன்று செய்யத்தக்கதன்று, மாரீச-133

தவமுற்றித்திருவுறுதல், மாரீச-179

தவளக்கங்கணம், விராத-16

தவா-நீங்காத, அகத்-19

தழல்வண்ணன்வில்லைத்தோளாலிறுத்தான், சடாயுவு-116

தழலுருவுகொண்டனையமேனி, கரன்-41

தழலெடுத்தான் - சிவன், சூர்ப்ப-101

தழற்புரைசுடர்க்கடவுடந்ததமிழ், அகத்-41

தழிவந்து-தழுவிவந்து, கரன்-99

தழுவிச்சுமந்து - சேர்த்துப்பிடித்துத் தாங்கி, விராத-36

தழுவுகாதலன், சடாயுகா-18

தழுவுதல்-குறித்த இலக்கைத்தவறாது சார்தல், கரன்-19

தழை - மயிற்பீலிக்குடை, கரன்-48: ×சிறை, சடாயுகா-27

இடிவீழ்தல், பெருந்திசையெரிதல், முடிமாலைபுலால் நாறுதல், கரன்-70-72
தீப் புண்மேல்நுழையத் துடித்தல், சடாயுவு-122 [ரீச-95
தீபமாலை பொன்னனூரெடுத்தல், மா
தீபமொன்று மற்றொன்றை யுற்று இரண்டுமாயெரிதல் X காமமும் அதனுலான தாபமும் இரண்டும் ஆருயிரிற் கலத்தல், மாரீச-82
தீமருந்து, மாரீச-91
தீயநிமித்தம், கரன்-69 [சூர்ப்ப-67
தீயரோடுவரும் விளையாட்டுந் தீமை, தீயவர்ச் சேர்தல்செய்தார் தூயவரல்லர், சடாயுவு-54
தீர்வு-ஒழிவு, சரப-9
தீரவாழ்க்கை, கரன்-147
தீவினை தீய நோற்றல், சூர்ப்ப-41
துஞ்சுவது-இறப்பது, சடாயுவு-15
துடைத்தல்-போக்குதல்,சடாயுவு-212
துண்டதுண்டம்-சின்னபின்னம்,சடாயுவு-109
துண்டம் - பறவைமூக்கு, சடாயுவு - 107, 109
துண்டமதி-பிறைச்சந்திரன், அகத்-51
துண்டமாக்குதல்-அறுத்தல், கரன்-7
துண்ணெனுமவ்வுரை, சடாயுவு-150
துணிதல் - துண்டாதல், விராத-28, கரன் - 78
துணிபட, கரன் - 86
துணிவு - உறுதிதருவன, பெரியோர் துணிந்து செய்யத்தக்கதெனக்கொண்டவிஷயம், நிச்சயம், மாரீச-177
துணுக்கம், கரன்-52, 57
துணுக்கமுற்று - அச்சங்கொண்டு, கரன்-176 [83
க்கெனல் - திடுக்கிடல், சூர்ப்ப-
க்கை மதவேழக் குழுவனுர், கரன்-27
துணையிலாதவர்க்குப் பகைப்புலம்தொலைத்து நீக்கலரிது X புணையிலாதவர்க்குவேலைபோக்கரிது, கவந்த 54
துப்பழிசெவ்வாய், மாரீச-175
துப்பின்கொம்பர்-சீதை, மாரீச-142
துப்பு - பவழம், வலிமை: சூர்ப்ப-21: X இதழ்,
தும்புரு, மாரீச-12
தும்புருத்தன், விராத-65
துமித்தல் - வெட்டுதல், கரன் - 151: துண்டித்தல், அயோமு-57
துமித்து-ஒழித்து, வெட்டி, சூர்ப்ப-96
துமிலம் பேராரவாரம், கரன்-15
துயக்கு-சோர்வு, கரன்-47
துயர்க்கூற்றமாயவிருள், அயோமு-1
துயர்குளித்தல் - துயரில்மூழ்குதல், சடாயுவு-218
துயர்விளைவு, அகத்-11
துயரஞ்சித் தொடர்கிலாத்தொல்குடி, சூர்ப்ப 98
துயல்வருதல் - தொங்கியசைதல், விராத-10
துரக்க-விரைந்துதொடர, விராத-66: செலுத்த, அகத்-12
துரகம் கழுத்தறுப்புண்டவை X செந்நெல் சூடறுப்புண்டவை,கரன்-149
துருத்திபோலுயிர்த்துயிர்த்து, மாரீச-91
துருவி-தேடி, அயோமு-32
துவசமாரமர், சரப-26
துவர்த்தல் - பவழத்தின்தன்மையைக் கொள்ளுதல், அயோமு-98
துவளாமல்-வருந்தாமல், கவந்த-34
துவன்ற-நெருங்கிய, விராத-2
துவன்றி-நெருங்கி, மாரீச-97
துவன்றின, கரன்-33
துவைத்தல்-அடித்தல், மாரீச-17
துழனி-ஆரவாரம், விராத-12
துழாயலங்கல், விராத-58
துளக்கம்-நடுக்கம், சடாயுவு-129
துளங்குதல்-ஒளிசெய்தல், நடுங்குதல், விராத-8
துற்றுதல்-உட்கொள்ளுதல்,கவந்த-18
துறக்கமுற்றுன், சடாயுகா-19
துறை-இடம், சரப-5 வழி,மாரீச-123
துன்பம்வந்தூன்றச் சிந்தையையெரிவு
யுவு-194
துன்றி-அடர்ந்து, கரன்-26
துன்றுதல் - நெருங்குதல், அயோமு - 33, விராத-11
துன்னர்-பகைவர், சரப-26
துன்னுதல்-பொருந்துதல், சரப-32
துனி-மனத்துள்ள கறு, சூர்ப்ப-92
துனைதல்-விரைதல், கரன்-141

நரன், சூர்ப்ப-109
நல்கி-உபசரித்து, அகத்-10
நல்குதல்-கொடுத்தல், அகத்-56
நல்கும்-அன்புகொள்ளும், மாரீச-162
நல்லவன்றோற்பதே, சடாயுவு-133
நல்லாசிரியர் ஒருவர்க்கு முத்திமார்க்கத்தைப்போதித்தல் X சவரி இராமனுக்கு செல்வழிதெரித்தல், சவரி-7
நல்லாண்மகள்-நல்லாளாகியமகள், சூர்பப-88
நலிஞ்சுதின்னுதல், விராத-67
நவ்விநயனம், மாரீச-89
நவ்வியின்விழியவள்-சீதை, சரப-35
நவ்வியினொதுங்கி, சூர்ப்ப-37
நவக்கிரகம் X நவமணி, சடாயுகா-7
நவஞ்செய்தல்-புதுமைவிளைத்தல், சூர்பப-18
நவமை-புதுமை, அகத்-31
நவை-குற்றம், சரப-29
நவையிலாநவை, அயோமு-5
நளி-பெருமை, மாரீச-15
நளிர்-குளிர்ச்சி, மாரீச-159
நளினநாட்டத்தான், சூர்ப்ப-18
நளினப்பள்ளி, சூர்ப்ப-4
நறை-தேன், மாரீச-163, சடாயுவு-28
நறைச்சுனைமடுத்துண்டு-தேனூற்றிலிறங்கிப்பருகி, சடாயுவு-28
நன்றுவரவென்று பலநல்லுரைபகர்தல், அகத்-47
நன்னுதல்-அழகியநெற்றி, சூர்ப்ப-44
நனந்தலை-அகன்றஇடம், மாரீச-42
நாXசிகைக்கொழுந்து, கவந்த-14
நாக்கரிதல், சூர்ப்ப-125
நாக்குXமின், மாரீச-238
நாகம்-மலை, கரன்-97: பாதாளம், யானை:("நாகமது நாகமுறநாகமெனநின்றான்") அகத்-39: புன்னைமரம், மாரீ-96
நாகம்படமொளித்தல், சடாயுவு-89
நாகம் பளிங்கு, மாரீச-96
நாகரிகர்-கண்ணோட்டமுடையவர், சூர்பப-125
நாகருலகு, சூர்ப்ப-36
நாசம்வந்துற்றபோதுநன்மையுந்தீமையன்றோ, மாரீச-202
நாசி-மூக்கு, மாரீச-58, சூர்ப்ப 130
நாட்கொள்ளுதல், சூர்ப்ப-96
நாட்டங்கடியுக நோக்குதல், சடாயுவு-179
நாட்டங்களாயிரமில்லையென்றவலமெய்தல், சடாயுவு-29
நாட்டம்-கண், சூர்ப்ப-16, கரன்-8
நாட்டமெரியுமிழ, சூர்ப்ப-121
நாட்டல்-குறித்தல், மாரீச-4
நாடறியாத்துயில், சூர்ப்ப-135
நாணுளும், சரப-25
நாணொலிவருணனை, விராத-24
நாந்தகவுழவர், மாரீச-38
நாப்பண்-நடு, மாரீச-97, கவந்த-2
நாமம்-பெயர், அகத்-5: பெருமை, மாரீச-159
நாமவாளெயிறு, சூர்ப்ப-81
நாமவேல், விராத-67
நாரதன், சரப-4
நாரதன் வாணிபோல வீணையினரம்பிடைவிளைத்த தேமறை செவியின்வார்த்தல், மாரீச-13
நாரம்-அன்பு, மாரீச-180; நீர், மாரீச-105
நாரி-பெண், அயோமு-35
நாவிநாறோதி, மாரீச-89
நாள்-சிறப்புடைய நட்சத்திரம், மாரீச-5
நாள்செய்தல்-அன்றுமலர்தல் ("நாட்செய்தகமலம்") சடாயுவு-209
நாள்நின்றுளதனால் பொன்றாதுளனாயினன், மாரீச-154
நாளம் பூவின்காம்பு, சூர்ப்ப-4
நாளனைத்தையுங்கடந்தனன்-வெகுபிராயமானவன், சடாயுவு-177
நாளினூல்-சோதிடசாத்திரம், மாரீச-129
நாளுலந்தழிதல்-ஆயுள்நாள்ஒழிந்துபடுதல், கரன்-63
நாற்கொம்புக்கரி, சரப-22
நாறுதல்-ஒழுகுதல், சரப-12: வெளித்தோன்றுதல், சூர்ப்ப-24
நான்மறையின்கனி, சரப-24
நான்முகன், சரப-15
நான்முகன் நரைதிரையொன்றில்லாதான், சூர்ப்ப-124

பருப்பதம் வேரொடும் எடுத்து விசைத்துவிடுதல், விராத-29
பருவச்சோலை, சூர்ப்ப-7
பருவம்-காலம், மாரீச-99, 103
பருவரல்-துன்பம், சடாயுவு-148
பருவரன்மயக்கு, சூர்ப்ப-99
பல்தோன்றும்பகுவாய், சூர்ப்ப-138
பல்லம்-ஒருவகைப்பாணம், கரன்-77
பல்லவம், தளிர், சூர்ப்ப - 31: அயோமு - 94
பல்லாண்டிசைத்தல், சூர்ப்ப-108
பல்லாயிரமிருள்-மிக்கவிருள், கரன்-89
பலி, சடாயுவு-106
பலிபூணுதல்-பலியிடப்படுதல், கரன்-99
பவர்-நெருங்கிய, கரன்-120
பவளக்கொம்பர் X சீதை, சடாயுவு-25
பழமொழி-தொன்று தொட்டுவழங்கி வரும்மொழி, சூர்ப்ப - 139: முன் கூறிய வார்த்தை, கரன்-61
பழி-நிந்தனை, சூர்ப்ப-103
பழிப்பு, சூர்ப்ப-25
பழிபடுபிறவி-அரக்கஜந்மம், சூர்ப்ப-52
பழுதறுபெண்மை, சூர்ப்ப-48
பழுது-அழிவு, கரன்-88
பழுமரம், விராத-2
பழுவம் - சோலை, விராத-2: அகத்-2: தொகுதி, சூர்ப்ப-3
பளிக்கறை, அயோமு-37
பற்று-தொடர்பு, மாரீச-82
பற்றுதல்-நெருப்புமூண்டெரிதல், சடாயுவு-101
பறத்தல்-விரைந்துநடத்தல், கரன்-137
பறவை நாஅவிந்தடங்குதல், சடாயுவு-35
பறித்தல்-இழுத்தல், கரன்-138: பிடுங்குதல், விராத-12
பறைதல்-சொல்லுதல், மாரீச-225
பறைபோதும்-பறையடிப்பதுபோலத் துடிக்கும், மாரீச-193
பன்னகாதிபர், விராத-12
பன்னல்-துதித்தல், விராத-56
பன்னி - பத்நீ: விராத-5: கற்புடைய பெண், சூர்ப்ப-52
பனி - அச்சம், விராத-52: குளிர்ச்சி, சூர்ப்ப - 7: பனிக்கட்டி அல்லது பனிநீர், சூர்ப்ப-77
பனிவருங்கான், மாரீச-34
பனியெரிந்தால் வேனிலை விளம்பலாமோ, மாரீச-100
பாக்கியம்-பேறு, மாரீச-227, சடாயுவு-189, சூர்ப்ப-130
பாக்குமரத்தின் மணிவடஞ்சுற்றி ஊசலாடுதல், மாரீச-39
பாகனையசொல்லி, அகத்-59
பாகியல்கிளவி, சடாயுவு-25
பாங்கர்-பக்கம், சூர்ப்ப-7
பாசம், கரன்-16
பாசிலை, அயோமு-33
பாடகத்தரம்பையர், கரன்-119
பாடமுறுதல்-பளபளவென்று ஒளிசெய்தல், சரப-11
பாடவம்-திறமை, (வடசொல்.) சூர்ப்ப-73: கரன்-51
பாடுபட-கெம்பீரமாக, வருத்தமுண்டாக: விராத-17
பாண்-பாட்டு, மாரீச-127
பாணி - கை, மாரீச-13: தாளவொழுங்கு, மாரீச - 22: நீரோட்டம், மாரீச-96
பாணிக்க - பொழுதுநீட்டிக்க, சடாயுவு-157
பாபம் நின்றிடத்துத் தருமம்சில்லா, மாரீச-82
பாம்பணை பஞ்சணை, சடாயுவு-142
பாம்பறியும் பாம்பினகால், சூர்ப்ப - 139
பாம்பின்பெருமை சிறுமைக்கொருபெற்றி குறைந்ததுண்டோ X திங்களோடு இச்சிறுமின்பிறை சீமை குறைந்ததில்லை, மாரீச-136
பாம்பு படங்குறைந்து ஒடுங்குதல், சடாயுவு-35
பார்-தரை, கரன்-99
பார்ப்பு-குஞ்சு, சடாயுகா-48
பாரவெஞ்சிலை, விராத-23
பாரிடம்-பூதம், கவந்த-23
பால்பரந்தனையவின்சொல், அயோமு-8
பாலகில்லர், அகத்-3
பாலம்-பிண்டிபாலம், கரன்-35
பாலையாழ் பழித்த சொல், மாரீச-95
பாவம்-பிராணி, அயோமு-46
பாவமோவெல்வது, சடாயுவு-133

முரஞ்சு, அயோமு-42
முரண் - வலிமை, விராத-23: வலி, சூர்ப்ப 94
முரணுதல் - மாறுபடுதல், விராத-17, அயோமு-36
முரலுதல்-மொய்த்தொலித்தல், இசையுண்டாகவொலித்தல், சூர்ப்ப-34
முரற்றுதல்-ஒலித்தல், அயோமு-79
முரிந்துகுமணி, மாரீச-15
முருங்கியதணல் - யாவுமழியும் நெருப்பு, மாரீச-111
முருங்குதல்-நிலையழிதல், சூர்ப்ப-78, கவந்த-18
முருடு - வாச்சியவிசேஷம், கரன்-28: விறகு, மாரீச-139
முலைகொண்டிடைவணங்குதல், சூர்ப்ப-35
முழங்குதல்-ஒலியெழுப்புதல், கரன்-23
முழீக்கொள்ளுதல் - முழுகடிக்கப்படுதல், கரன்-3
முழுக்களும் X முழுக்கஅள்ளும், கரன்-34
முழுதுணர்முனிவர், சூர்ப்ப-48
முழுமுகத்திருகயன் முத்தினாலி, மாரீச-40
முழுமுதல்வன்-திருமால், அகத்-55
முழைதிறந்து - குகைபோன்றவாயைத்திறந்து, சடாயுவு-2
முழையின்வாளரி, கரன்-23
முள்-அம்பு, விராத-33
முளை-மூங்கில், சடாயுவு-20: இருப்புமுளை, தண்டாயுதம், கரன்-78
முளைத்தல்-தோன்றுதல், கவந்த-48
முற்றல்-செய்தல், மாரீச-234
முற்றிப்பொழிகாதல்-முதிர்ந்து வெளிப்படுகின்ற விருப்பம், மாரீச-218
முற்றியஆடல் - மிகுதியான ஆட்டம், மாரீச-39
முற்றுதல்-பூர்ணமாதல், சரப-19: செய்துமுடித்தல், எல்லையிலிருத்தல் கரன்-16,91, முடியச்செய்தல்,சூர்ப்ப- 48: வளைத்தல், கவந்த-18
முற்றும்முற்றி - மிகவும்முதிர்ந்து, மாரீச-139
முற்றுற-எங்கும், கரன்-111
முறிந்தவில் X விண்ணிடுவில், கடலின்திரை, சடாயுவு-171
முறுவல்-புன்சிரிப்பு, விராத-23
முறையிட்டு, மாரீச-25
முறையிலோன், சடாயுவு-33
முன்னி-நோக்கி, முன்னெடுத்து, சூர்ப்ப-37
முன்னிலையில் தன்மைவருதல் - தாமரையுறையுநங்கை யிவரென நெருநனடந்தவரோ நாமென்ன, சூர்ப்ப-119
முனிசிந்தைதொடரப்போதல், அகத்-59
முனிதல்-வெறுத்தல், மாரீச-234
முனிவன், விராத-3
முனிவு-வெறுப்பு, மாரீச-39
முனை-போர், கரன்-143
முனைவன்-முன்னவன், சரப-5
மூக்கினாலுச்சி மோத்தல், சடாயுவு-189
மூசுதல்-நெருங்குதல், அகத்-40
மூட்டு-பொருத்து, சடாயுவு-113
மூடுதல்-நிறைந்திருத்தல், சூர்ப்ப-89
மூதெரிவளர்தல், அகத்-14
மூப்பெனும் பருவமு முனிய முற்றினன், சடாயுவு-22
மூரன்முறுவல் - சிரிப்பு, சூர்ப்ப-120
மூரி-பெருமை, கரன்-94
மூரிநீர்-கடல், அயோமு-23
மூலகாரணத்தவனொடும் முடிவுறமுற்றுங்காலம், சடாயுவு-162
மூலத்துஒன்று, சரப-30
மூலநாசம்-வேரோடழிவு, சூர்ப்ப-8
மூலம்-அடி, கரன்-67
மூலமில்லான், கவந்த-2
மூலமேயில்லாமுதல்வன், கவந்த-43
மூவகையுலக முதல்வ ருதவியபரிசு X தேவருமவுணருமுதலினோர் திசைதூவிய நறுமலர்க்குப்பை, மாரீச-7
மூவர் ஊழியினுஞ்சலியாதவர், சூர்ப்ப-102
மூவாமை-இளமை, சரப-28
மூவுலகத்துமுள்ள நவையிலாதன லங்கையினிடத்தன, சடாயுவு-46
மூன்றுகவடாய்முளைத்தெழுந்தமூலம், கவந்த-42
மெய் - மனம், மாரீச-92

வள்ளியோன், கரன் - 56
வற்கலை, சூர்ப்ப - 22
வறள்பட, கரன் - 152
வனதேவதைகாள், சடாயுவு - 78
வனம் - அடர்ந்த வலியதொகுதி, கரன் - 166
வனிதையர் மழலை X கிள்ளைச் சொல், மாரீச - 98
வனைதல் - கட்டுதல், சடாயுகா - 11: அழகுசெய்தல், மாரீச-124
வாகை-வென்றோர்சூடும்மாலை, கரன்-36
வாசம்-நறுமணம், சூர்ப்ப 2
வாசவனம், சரப 1
வாசவாடைவீச, மாரீச-90
வாடைவந்தபசும்பனி, மாரீச-99
வாணி-சரசுவதிதேவி, மாரீச-13
வாணிலைமருங்குலான், சூர்ப்ப-20
வாணுதல், சடாயுகா-42
வாதவேகம்-காற்றின்வேகம், விராத-7
வாமம்-அழகு, சூர்ப்ப-81
வாய் X முழை, கரன்-135
வாய்குழறி, விராத-41
வாய்தல்-வாயில், கவந்த-18
வாய்மடிதல் - நுனிக்கூர்மழுங்குதல், சரப-13
வாய்மை, சடாயுகா-5
வாய்வெரீஇ - வாய்குழறச்சொல்லி, அகத்-5
வாயிடையிதழ்-காதின்மேலிடம், மாரீச-66
வார்-கச்சு, சடாயுகா-48: நீட்சி, கரன் -131
வார்விசிக்கருவியோர் - மத்தளக்காரர், மாரீச-22
வாரணம்-யானை, விராத-49
வாரணவுரித்தொகுதி, விராத-15
வாரம் - குடியிறைப்பொருள், மாரீச-180
வாரிகலுழ்தல் - நீர்பெருகப்பெறுதல், மாரீச-44
வாருணம், அயோமு-93
வால்-தூய்மை, விராத-3
வாலறிவான்-தத்துவஞானி, சரப-17
வாலுளை, கரன்-75
வாழ்க்கைநாள்-ஆயுள்நாள், சடாயுவு-128
வாளரி, விராத-10
வாளிக்குழு, அகத்-55
வாளிணை X இருகண், சூர்ப்ப-32
வாளிப்புட்டில், கரன்-60
வாளிபெய்புட்டில், கரன்-18
வாளிற்பொருவதுநாணம், சடாயுவு-86
வாளொடு வாள் தேய்த்தலா லுகும் பொறி, கரன்-27
வான்-தேவலோகம், சரப-4
வான்காப்போர்முதலிய மூவரில் காத்தற்குரியார் இல்லை, சூர்ப்ப-126
வானநாடு-அந்தரம், கரன்-131
வானமுங் கானமு மாறுகொள்ளல், சடாயுவு-90
வானவர்தலைவன்-ஸ்ரீராமன், சரப 33
வானவரேத்தியவொலி X கோத்தவேலைக்குரல், கரன்-189
வாணுடியர், சரப-12
வானின்றபெரும்பதம் - சுவர்க்கம், சரப-7
வானுறநிவந்த மணிமரம், மாரீச-97
விகற்பம்-மாறுபாடு, விராத-44
விகற்பவுலகு - பலவகைப்பட்டவுலகு, அகத்-42
விசித்தல்-கட்டுதல், விராத-13
விசிரவசின்வரலாறு, சூர்ப்ப-50
விசிறும்-வீசியுதவுகின்ற, விராத-33
விசை-வலி, சரப-8
விசையம், விராத-27
விஞ்சைவேந்தர், மாரீச-8
விட்டமலையே பட்டு உடலூறுதல், விராத-30
விடநுங்கியகண்ணுடையார், மாரீச-144
விடமேறுவது, சூர்ப்ப-72
விடர், அகத்-27
விடியல் காண்டலி னுயிர் கண்டாள், சூர்ப்ப-90
விடிவு-வருத்தந்தீரும்வகை, மாரீச-153
விடுகாது, சூர்ப்ப 120
விடைத்தல் - கோபங்கொள்ளுதல், மாரீச-188
விடைகொண்டு-அநுமதிபெற்று, சடாயுவு-16
விடைத்து-சினங்கொண்டு, கரன்-103

இதனடியிற் குறித்துள்ள புத்தகங்கள் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலை, 19 - தென்னண்டைமாடவீதி, திருவல்லிக்கேணி என்ற விலாசத்திலும், வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர், 17 - தெள்ளிசிங்கப் பெருமாள் கோயில்தெரு, திருவல்லிக்கேணி என்ற விலாசத்திலும் கிடைக்கும்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| **கம்பராமாயணம்:— உரையுடன்** | | | |
| பாலகாண்டம் | ... | 5 | 0 |
| அயோத்தியாகாண்டம் | ... | 5 | 0 |
| ஆரணியகாண்டம் | ... | 4 | 0 |
| கிட்கிந்தாகாண்டம் | ... | 4 | 8 |
| சுந்தரகாண்டம் | ... | 5 | 0 |
| யுத்தகாண்டம் (2 - வால்யூம்) | ... | 10 | 0 |
| **பத்துப்பாட்டு:—** | | | |
| திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சி யுரையுடன் | ... | 0 | 4 |
| பொருநராற்றுப்படை ,, | ... | 0 | 3 |
| சிறுபாணாற்றுப்படை ,, | ... | 0 | 4 |
| முல்லைப்பாட்டு ,, | ... | 0 | 3 |
| நெடுநல்வாடை ,, | ... | 0 | 3 |
| பட்டினப்பாலை ,, | ... | 0 | 5 |
| சிலப்பதிகாரம் அடைக்கலக்காதை ,, | ... | 0 | 3 |
| நாலடியார் உரையுடன் | ... | 2 | 0 |
| நன்னூற்காண்டிகையுரை | ... | 1 | 8 |
| **வில்லிபாரதம்:—** | | | |
| சபாபருவம் உரையுடன் | ... | 3 | 0 |
| உத்தியோகபருவம் ,, | ... | 2 | 8 |
| சல்லிய சௌப்திகபருவங்கள் ,, | ... | 1 | 8 |
| நிரைமீட்சிச் சருக்கம் ,, | ... | 1 | 0 |
| திருப்பாவை உரையுடன் | ... | 0 | 6 |
| சரசுவதியந்தாதி உரையுடன் | ... | 0 | 3 |
| சடகோபரந்தாதி | ... | 0 | 12 |
| திருவேங்கடக்கலம்பகம் உரையுடன் | ... | 0 | 10 |
| அழகர்கலம்பகம் உரையுடன் | ... | 0 | 10 |
| மதுரைக்கலம்பகம் உரையுடன் | ... | 0 | 10 |
| அஷ்டப்ரபந்தம் விரிவுரைவுடன் | ... | 3 | 8 |
| திருக்கருவைக் கலித்துறையந்தாதி உரையுடன் | ... | 0 | 8 |
| திருக்கருவை வெண்பாவந்தாதி | ... | 0 | 8 |
| நாலாயிரதிவ்யப்ரபந்தம் | ... | 3 | 8 |
| தனித்தனியாயிரம் ஒரு ரூபாய்வீதம் | | | |
| நித்யாநுசந்தானம் | ... | 0 | 10 |
| திருமந்த்ரார்த்தம் | ... | 1 | 8 |
| குருபரம்பராப்ரபாவம் ஆறாயிரப்படி | ... | 3 | 0 |
| யதீந்த்ரப்ரவணப்ரபாவம் | ... | 1 | 0 |
| ஸ்தோத்ரபாடம் | ... | 0 | 6 |
| பகவத் விஷயம் 10 - வால்யூம் | ... | 50 | 0 |
| **வசனம்:—** | | | |
| உதயணன் சா | ... | 0 | 12 |
| சந்திராபீட சரிதை | ... | 0 | 5 |

ஆர். ஜி. பிரஸ், ஜி. டி, மதராஸ்.